|| ஸ்ரீ: ||




# ஆன்மிகத் திராவிடம்

திருவாய்மொழி சிந்தனைச் செல்வர், செந்தமிழ் வேதியர், ஸ்ரீ வைஷ்ணவ சிம்மம், "திருமால்" ஆசிரியர்

**ஸ்ரீ உ.வே. குமாரவாடி சே. இராமாநுஜாசார்யர்**

(தற்போது ஸ்ரீபெரும்பூதூர் அப்பன் பரகால ராமாநுஜ எம்பார் ஜீயர் ஸ்வாமி)







ஜீயர் நூல்கள் வெளியீடு எண் 3

**திருமால் பதிப்பகம்**

20/53, ஆபிரகாம் தெரு, மயிலை, சென்னை - 600 004, தொலைபேசி : 2495 4247

விலை : ரூ. 20



உலகாசிரியன்

இந்த நூல் கிடைக்குமிடம்:

எம்பார் ஜீயர் ஸ்வாமி மடம்
30, M.M. கோயில் தெரு,
ஸ்ரீபெரும்பூதூர் - 602 105
போன்: 27162073 செல்: 99943 23397

॥ ஸ்ரீ: ॥



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆன்மிகத் திராவிடம்

திருவாய்மொழி சிந்தனைச் செல்வர், செந்தமிழ் வேதியர்,
ஸ்ரீ வைஷ்ணவ சிம்மம், "திருமால்" ஆசிரியர்

**ஸ்ரீ உ.வே. குமாரவாடி சே. இராமாநுஜாசார்யர்**

(தற்போது ஸ்ரீபெரும்பூதூர் அப்பன் பரகால ராமாநுஜ எம்பார் ஜீயர் ஸ்வாமி)

## ஜீயர் நூல்கள் வெளியீடு எண் 3

## திருமால் பதிப்பகம்

20/53, ஆபிரகாம் தெரு, மயிலை, சென்னை - 600 004,
தொலைபேசி : 2495 4247



ஸ்ரீ ஜகதாசார்ய
மஹாமஹிமோபத்யாய, காஞ்சி

# P.B. அண்ணங்கராசார்ய ஸ்வாமி

## அணிந்துரை

அடியேன் செய்யும் விண்ணப்பம் உபயகுசலம்

இன்று ஸூஷாசமே ஸுதிநஞ்சமே, ஸ்ரீவைஷ்ணவம் என்கிற புத்தகத்தை 40 நிமிஷத்தில் முழுதும் படித்து முடித்தேன். உண்மையில் பேரின்ப வெள்ளத் தாழ்ந்தேன். பல நாள் பல நூல்களைப் பயின்று பெற வேண்டிய உணர்வை எளிதாக மிக எளிதாக ஊட்டியிருப்பது அற்புதம், மிக அற்புதம். உண்மையில் நானும் பலவிஷயங்களைப் புதிதாகவே உணரப் பெற்றேன். புத்தகத்தின் உருவம் சிறிதாயினும் விஷயங்களின் பெருமை அளவிடற் பாலதன்று. ஒவ்வோரெழுத்தையும் விடாமல் வாசித்தேன். ஆண்டு தோறும் வெளிவரும் என்றதைக் கண்டு குதூஹலம் குன்றியது. நாள்தோறும் வெளி வந்தாலும் சலிப்பிராது. மாதந்தோறுமாவது வெளி வரவேணும்.

எனது மனமார்ந்த மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டேன்.

அண்ணா,
27.7.77



பொருளல்லாத அடியேனைப் பொருளாக்கி,
அவன் பொன்னடிக் கீழ் புகவைத்த
ஆசார்யப் பெருந்தகை ஸ்ரீ உபய
வேதாந்த மஹா வித்வான் காரப்பங்காடு
வேங்கடாசாரிய ஸ்வாமி (வைகுண்டவாஸி)யின்
திருவடிகளுக்கு இந்நூல் ஸமர்ப்பணம்.

-அனுக்கசிஷ்யன், அபிமானபுத்ரன்

**சே. இராமானுசன்**

ஸ்ரீ:



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# முன்னுரை

கண்டேன் கமல மலர்ப்பாதம் காண்டலுமே
விண்டேயொழிந்த வினையாயின வெல்லாம்
தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுகப்
பண்டே பரமன் பணித்த பணிவகையே.

*(திருவாய்மொழி 10-4-9)*

"திருமாலுக்கு அடிமை செய்" என்பது தமிழ்த்தாய் அவ்வையின் வாக்கு.

தமிழ்க் குழந்தையின் கழுத்தில் அணிவது திருமாலின் ஐம்படைத் (சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு) தாலியே என்று சங்க நூல்கள் சான்று பகரும்.

அரிச்சுவடியில் தொடங்கும் தமிழ்க்கல்வி, அரியின் சுவட்டினைக் காட்டுவதிலேயே அமைதியுறும்.

'மாயோன் மேய காடுறை உலகம்' என்று தொல்காப்பியம் திருமாலுக்கு முதன்மை அளிக்கிறது.

"மா ஓயேயே, மாஓயேயே", "மறு பிறப்பறுக்கும் மாஓயேயே" என்று பிறப்பறுக்கும் பெருமான் 'திருமாலே, முழுமுதற் கடவுள்' என்று சங்கத் தமிழ்நூல் பரிபாடல் பறைசாற்றும்.

தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறளும் 'ஆதிபகவன், அடியளந்தான், தாமரைக்கண்ணான்' என்று முறையே முப்பாலிலும் திருமாலையே வைத்துப் போற்றுவது குறிப்பாக உணரலாம்.

சங்க காலத் தமிழரின் வேதக் கருத்தையே விரிவாக - தெளிவாகக் காட்டுவது ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தம் என்னும் திராவிட வேதம்.

திருமாலின் ஐந்து நிலைகளை, விவரிக்கும் பாஞ்சராத்திர ஆகமம் ஒரு திராவிட நூலாகும்.

வடமொழி வேதம் போன்று தமிழும் அனாதியே என்று வாதிடுவது வைணவ நூலே (ஆசார்ய ஹிருதயம்).

முதன்முதலில் மண்ணுலகில் கண்ணுறத் தோன்றிய திருமாலின் மச்சாவதார-கயல்மீன்-வடிவமே பாண்டியர் குலக்கொடியில் ஏறியது.

"பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதிபோல்
திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல்
பொறித்தாய்".

என்று கயல் கொடியைப் பாண்டிய மன்னன் இமய உச்சியில் ஏற்றி வைத்த செய்தியை மெச்சிப் பெரியாழ்வார் தம் திருமொழியில் போற்றி வைத்தார்.

நற்தமிழால் நூல் செய்து நாட்டை உய்வித்தவர்கள் ஆழ்வார்கள்.

தமிழ் மண்ணைத் 'திவ்விய தேசம்' - இறைவன் உகந்து எழுந்தருளின நிலங்கள் ஆக ஆக்கியது ஆழ்வார்களின் அருளிச் செயல்களே (பாடல்களே).

"கங்கையிற் புனிதமாய காவிரி" என்று பாடினார் தொண்டரடிப்பொடி.

சாதி, இனம், மொழி, நாடு கடந்து (இழந்து அல்ல) சிந்தித்து ஆத்மாவை வாழ வைப்பது வைணவ நெறி.

தமிழகத்து நான்காம் வருணத்தவரான நம்மாழ்வாரின் "திருவாய்மொழியே" வடவரும் வணங்கும் திராவிட வேதமாகத் திகழ்கிறது.

சோழ நாட்டுக் கள்ளர் மரபினரான திருமங்கை ஆழ்வார் இமயத்தின் மீதேறி, வதரிநாதனுக்குத் தமிழ்ப்பதிகம் பதித்தார்.

கவிச் சக்கரவர்த்தி கம்பநாட்டாழ்வான், திருமாலின் அசைவில் சிருக்கு நிகராக, தெய்வக் காவியம் புனைந்தான்.

தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கப் பரஞ்சுடரான அரங்கன் அடுதிறல் அயோத்தி எம்மரசு இராம

பிரான் நம் தமிழகத்துக்கு உவந்தளித்த அருட் பரிசாக விளங்குகிறான்!

அப்பரிசின் விளைவாகவன்றோ ஆழ்வார்களின் ஈரத் தமிழில் பக்திவெள்ளம் பெருக்கெடுத்தது, பாரதமெங்கும் பக்தி வெள்ளத்தைப் பாத்தி கட்டிப் பாய்ச்சியவர் சொல்லார் தமிழ் ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறி யாவும் தெரிந்தவன், நல்லார் பரவும் இராமாநுசனேயன்றோ!

பல்வேறு வேதாந்த தத்துவக் கருத்துக்களை முட்டின்றி முரணின்றி ஒருங்க இணைத்த இராமாநுசரின் விசிட்டாத்வைத விளக்கம். இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களின் கருத்தை அடியொற்றியதன்றோ!

ஆழ்வார்களின் பாடல் பெற்ற திவ்வியத் திருப்பதிகள் நூற்றெட்டில் தொண்ணூற்றுக்கும் மேலானவை தென்னாட் டில் திகழ்வன.

அங்கெல்லாம் கோயில் கொண்டுள்ள திருமால், நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் தன் இன்முகம் காட்டி, அடியார் வரவை ஆவலுடன் நாளும் எதிர் நோக்கிக் காத்திருக்கிறான்.

பக்தியுள்ள பெருமக்கள் வருகை நோக்கி, இறைவன் உவந்து எழுந்தருளியிருக்கும் இடமெல்லாம் ஆர்வத்துடன் சென்று நாம் சேவிக்க வேண்டாமா?

நாடு நலமடைய அவன் ஊரும், பேரும், தாரும், குணமும், செயலுமே கூறி, உலகறியச் செய்வோம் வாரீர்!

வைணவ நெறியில், எளிய வாழ்வும், இறை உணர்வால் உயர்ந்த நோக்கும், சமுதாயமெங்கும் பரவட்டும்! அன்பும், அறனும், அறிவும், அருளும் மேலோங்கி நிற்கட்டும்!

அதற்கான பணிகளில் ஒன்றாக, இச்சிறு வெளியீடு உதவட்டும்!

இந்நூல் சில ஆண்டுகளுக்கு முன் வெளியிடப்பெற்று, நல்ல வரவேற்பைப் பெற்றது. காஞ்சி மஹாவித்துவான், மஹா மஹிமோபாத்யாய பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசாரிய ஸ்வாமி தாமாக முன்வந்து இதற்கு அரியதோர் அணிந்துரை வழங்கியுள்ளார். திருமாலடியார் பாத யாத்திரையின் மறுபதிப்பாக அன்பர்கள் கரங்களுக்கு அணியாக விளங்க, அறநெறி பதிப்பகம் இதனை வெளியிட்டு ஸ்ரீ வைஷ்ணவம் - திருமால் நெறியில் - தனது பணியை மீண்டும் ஜீயர் நூல்களில் தொடருகிறது.

# பொலிக! ஆன்மிகத் திராவிடம்

கோவை செம்மொழி தமிழ் மாநாட்டுக்கு ஸ்ரீபெரும்பூதூர்
அப்பன் பரகால ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் அருளுரை

அறியாதன அறிவித்தல் ஆசிரியத் தொழில். காலம் நம் உடலைக்கடத்திச் செல்கிறது. இன்பதுன்ப உணர்வுகளுடன் விழிப்பும் தூக்கமுமாக, இவ்வுடலில் நமது பயணம் தொடர்கிறது.

விழிப்பிலும், நாம் எங்கிருந்து புறப்பட்டோம், எங்கே போகிறோம் எத்தனை நாள் பயணமிது ஒன்றும் அறிகிலோம். இப்படியும் ஒரு மூடத்தனமான வாழ்க்கைப்பயணம்! இதில் காணும் விசித்திர உணர்வுகள், முயற்சிகள் எத்தனை எத்தனையோ,

உண்டியே உடையே உகந்து ஓடும் இம்மண்டலத்தில் மனிதன் செய்துவரும் சோதனைக்குக் குறைவில்லை, சாதனைக்கு அளவில்லை, வேதனைகளுக்கும் முடிவில்லை.

மண்ணோடு விண்ணையும் ஆக்கிரமிக்கும் அணுகுண்டு அவதாரம் ஒன்று போதுமே மனித சாதனைக்கு ஒப்பற்ற ஓர் எடுத்துகாட்டு.

## மானிடச் சிக்கல்

மனிதன் அறிவின் வழிசென்றானே தவிர "அன்பின் வழியது உயிர்நிலை" என்பதனை உணர்ந்தான் இல்லை. அப்படி உணர்ந்தாலும், தான், தனது குடும்பம், சாதி, இனம், மொழி, நாடு என்று உடலையொட்டியே பாச வலைப்பட்டு வேறுபாடுகளில் பகை வளர்த்தானே தவிர, படிப்படியாக உயிர்க்குல அன்பை வளர்க்கவில்லையே! இவற்றுக்கெல்லாம் காரணம் தெளிவான ஆத்ம ஞானம் இன்மையே. "காக்கைக் குருவி எங்கள் சாதி, நீள் கடலும் மலையும் எங்கள் கூட்டம்" இது தானே உண்மை. 'நாம் யார்' ஏன் இந்த உடலுக்குள் வந்தோம்? இதில் நமது சாதனைகள், சோதனைகள், வேதனைகளை இங்கேயே விட்டு நாம் எங்கேயோ அல்லவா போகிறோம். இப்படி சிந்திப்பது பகுத்தறிவுக்குப் பொருத்த மல்லவா?

தினம் தேடி நிதம் தின்று, பல சின்னஞ் சிறு கதைகள் பேசி நமது காலம் கழிகிறது. ஓயாத கவலைகள் ஒருபக்கம் உருவித் தின்றிட ஓட்டைச்சாலில் வைத்த நீர் போல வாழ்நாளில் பாதி உறக்கத்தில் ஒழுகிச்சென்றிட, மீதியில் சிறியவை சிரித்து

மகிழ்கின்றன. வயசுக்கு வந்தவை இளமைத் துடிப்பில், இன்பத்துளிகளில் காம மயக்கத்தில் தருக்கித் திரிகின்றன. மூப்படைந்தவை முனகத் தொடங்குகின்றன. இதற்கு இடையே பலவகை, பசி, பகை, நோய் தீயன வந்து நலிகின்றன.

இது தானே மனித வாழ்க்கை!

மரணத்தை நெருங்கும் மனிதன் மறுமைக்கு வெறுமை காணும் போது உடலை ஒட்டி நின்ற உறவுகள் ஒதுங்கி நிற்கின்றன. உயிரைப்பற்றி நிற்கும் உணர்வுகளை உதற முடியாமல் மனிதன் குமைகிறான்.

ஒழுங்கான ஆத்ம சிந்தனை இல்லாமையால், தான் கண்டதும் கேட்டதுமே கொண்டு, மதிவிகற்பால் பிணங்கும் பல சமயக் கருத்துக்களில் சிக்கித் தவிக்கிறான். முடிவில் தெளிவில்லாமலே சாகிறான். பயன் அடைவது போல மகிழ்ந்து முயன்று முடிவில் ஏமாறிக் கிடந்து அலற்றும் இவை என்ன உலகியற்கை!

## இறைவன் கருணையுள்ளவன்

நம்மைப்படைக்க, தன் உந்திப்பூவில் நான்முகனைப் படைத்த தேவன், கருணையோடு நம் ஆத்ம சிந்தனைக்காக வேதத்தையும் வெளியிட்டான். இம்மறை நூல்களே உண்மைகளை நன்மைகளை நீங்காத இனிமைகளை நமக்குக் காட்டுவன. அவைகளை மக்களுக்கு விளக்குவதே ஆசிரிய வேலை. பிறப்புக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப, மனிதமனம் புலன்கள் வழியே நம் ஆன்ம ஒளியை வெளியே தள்ளி, அகத்தை மறைக்கிறது!

"அகற்ற நீ வைத்த மாய ஐம்புலன்களாம் இவை" என்பார் நம்மாழ்வார். இதனால் ஆன்ம ஒளி குன்றி, "அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன்" (திருவாய்மொழி) புறத்தில் உள்ள பொருட்களையே, கண்டு, கேட்டு, உற்று, மோந்து, உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்ப மயக்கத்தில் ஆன்மா தன்னை அறவே மறந்து விடுகிறது! இந்த அவித்யை அல்லது அஞ்ஞானத்தால், அறியாமை யால், மனக்குற்ற மாந்தர் ஐம்பொறிகளால் இயற்றும் செயல்கள் அவர்களை வல்வினைகளாகச் சூழ்கின்றன. இன்ப துன்ப உணர்வுகளுக்கு ஓயாது ஆளாக்குகின்றன.

நிலையற்ற உடலில் நிலையான ஆன்ம உணர்வையும் இன்பத் தையும் இழந்து, மாறி மாறிப்பல பிறப்பும் பிறந்து, துன்புற்று, உய்ய வழி தெரியாமல் ஆத்மா அல்லலுறுகிறது! இறைவன் கருணையுடையவன். அறிவிலா மனிதர் நல்லதும் தீயதும்

விவேகிக்க (பகுத்தறிய) உதவியாக வேத சாஸ்திரத்தை வெளியிட்டான். "யோ பிரம்மாணம் விதாதி பூர்வம் யோவை வேதாம்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிறது உபநிடதம்.

## உபநிடதம்

பாரதத்தின் தத்துவ நூல் தன்னிகரில்லாத அதன் உபநிடதங்களே! மூவகைத் தாபங்களிலிருந்து (தாபத்ரயம்) விடுவித்து, இறைவனோடு இணைத்து நம்மை இருத்தி வைக்கின்றன. அமைதி அருளுகின்றன. அது பற்றியே - உப : அருகே, நிடதம் : வைக்கிறது - என்ற பெயர் பெற்ற அம்மறை நூல்கள் இறைவன் நமக்கு அருளிய வேதம் இறைவனையே நமக்குக் காட்டுகின்றது!

வடமொழி மறை நூல்கள் இம்மைக்கும் மறுமைக்கும் பொதுவான வழிகளை கருமம் (செயல்) ஞானம் (அறிவு) எனப் பிரித்துக் கூறியதால் சிக்கல்கள் பல எழுந்தன. "சாஸ்திர ஞானம் பஹு"க்லேசம், புத்தேச்சலன காரணம்" என்பர். பிற்கால நூல் அறிவால், மனித சிந்தனைகளில் கருத்து வேறுபாடுகள் முளைத்து விரிந்தன!

கருணை மிக்க இறைவன், அதற்கும் தீர்வாக சாஸ்திரத்தின் 'தாத்பர்யம்' திரண்ட கருத்தை சில மந்திரங்களைக் காட்டி "உபதேச வழியாக" வெளியிட்டான். அவையும் ரகசியங்களாகி "ஓராண் வழி உபதேசமாக"ச் சுருங்கி விட்டன!

## திராவிட வேதம்

இந்நிலையில், வழக்கு இழந்த வட மொழி மறைநூல் உண்மைகளை மக்கள் இழக்க வொண்ணாது என்று, வேதத்தை திராவிடமாகச் செய்தான் இறைவன். திரு மாலால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற, மாறன் சடகோபனின் தன் தமிழ் நூலே திராவிட வேதாந்தமாக அல்லது உபநிடத மாக வெளிப்பட்டது. வடமொழி மறை வாணரும் வணங்கிப் போற்றும் பேறு பெற்றது!

"வடமொழி மறை என்றது தென் மொழி மறையை நினைத்திறே" என்பார் அழகிய மணவாளப்பெருமான் நாயனார். வடமொழி போன்று தென்மொழியும் அனாதி என்பது அவரது வாதம். "தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்று வேதாந்தவித்தகர் தேசிகனும் அதற்கு ஒப்புதல் தந்தார்.

"மிக்கவேதியர் வேதத்தின் உட் பொருள் நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான் தக்க சீர்ச் சடகோபன்" என் பார் மாறனைத் தவிர தேவு மற்றறியாத அந்தணர் மதுரகவிகள்.

"மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்" என்பார் மணவாள மாமுனிவன். சந்தங்கள் ஆயிரமும் கற்று வல்லரானால் அந்தமில் பேரின்ப வீடுபேறு, தாமரைக் கண்ணான் உலகு கையிலங்கு கனி யாகும்.

"கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார்தலைப்படுவர்
மற்று ஈண்டு வாரா நெறி"

என்பது தமிழ்ப் பொதுமறை (குறள்).

'கற்பவை கற்க' என்பதற்கு ஏற்ப மனிதன் இன்றியமையாது அறிய வேண்டிய செம்பொருட்கள் ஐந்து. அவை மிக்க இறைநிலை, மெய்யாம் உயிர்நிலை, தக்க நெறி, தடையாகித் தொக்கியலும் ஊழ்வினை, வாழ்வு. இவ்ஐந்தினையும் தெள்ளத் தெளிய ஓதுவதில் திருவாய்மொழிக்கு ஒப்பு ஒரு நூல் இவ்வுலகில் இல்லை!

"பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு" (பிறவித் துன்பத்திற்குக் காரண மான அறியாமை நீங்குமாறு, முத்தி என்னும் சிறந்த நிலைக்குக் காரணமான செம்பொருளைக் காண்பதே மெய்யுணர்வு? - (மு.வ)

## எம்பெருமானார் தரிசனம்

"பண்தருமாறன் பசுந்தமிழ், ஆனந்தம் பாய் மதமாய் விண்டிட வந்த எங்கள் இராமாநுச முனிவேழம், மெய்ம்மை கொண்ட நல்வேதக்கொழுந்தண்டம் ஏந்திக் குவலயத்தே மண்டி வந்து ஏன்றது, வாதியர்கள் உங்கள் வாழ்வற்றதே!" என்ற அமுதனார் வாக்கும் பலித்தது!

"முத்தியோ சிலரது சொத்து என இருக்கையில் இத்தமிழ் நாடு தன் அரும் தவப்பயனாய் இராமாநுசனை ஈன்ற தன்றோ" என புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் பிற்காலத்தில் ஒப்பும்படி மாறன் அடிபணிந்து உய்ந்த இராமாநுசன் தமிழகத்தில் வெற்றி கண்டு வீறு நடையிட்டார்.

எம்பெருமானார் தரிசனம் என்றே இதற்கு நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்துள்ளார்.

தீதில் நன்னெறியாம் திருமால் நெறி தவிர மனித சாதனைகள் எதனாலும், உயிர்க்குலம் அமைதி காணவியலாது!

கலியின் கோலங்கள், அவலங்கள் அடங்கிட நமக்கு இன்றுள்ள ஒரே வழி, ஆன்மிகத் திராவிடமே, அதாவது திருவாய்மொழி எனும் பகவத் விஷயமே. இறைவனை அறிவதற்கு மட்டுமின்றி

அவனது குணங்களில் ஆழ்ந்து அடிமை புரிவதற்கும் ஆனந்த முறுவதற்கும் வையத்து வாழ்வாங்கு வாழ வழி வகுப்பது, செந்தமிழ் வேதம் திருவாய்மொழியே.

அந்நூல் பயனை, ஆழ்வாரின் வாக்கிலேயே கூறிமுடிப்போம்.

பொலிக! பொலிக! பொலிக! போயிற்று வல்லுயிர்ச்சாபம்
நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு யாதொன்று மில்லை
கலியும் கெடும் கண்டு கொண்மின் கடல் வண்ணன் பூதங்கள்
மண்மேல் மலியப்புகுந்து இசைபாடி ஆடி உழிதரக்கண்டோம்!

கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்
தொண்டீர்! எல்லீரும் வாரீர் தொழுது தொழுது நின்று ஆர்த்தும்.

பொலிக! பொலிக!

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஜீயர் அருளுரைகள்

ஸ்ரீ வைஷ்ணவம், உபயவேதாந்த ஸித்தாந்தம், உபயம் என்னும் சொல் இரண்டு என்பதைக் குறிக்கும். ஸம்ஸ்க்ருதம், தமிழ் என்னும் இரண்டு மொழிகளையும் இந்த உபயம் என்ற சொல் குறிப்பிடுகிறது.

இவ்விரண்டு மொழிகளுமே அநாதியானவை. ஸம்ஸ்க்ருத வேதத்தை 'வடமொழி மறை' என்று குறிக்கும்போதே 'தென் மொழி மறை' நினைவுக்கு வரும். 'வடமொழி மறை, (திருவாய் மொழி 8-9-8) என்று நம்மாழ்வார் குறித்தது தென்மொழி மறையை நினைத்திறே' என்கிறது ஆசார்ய ஹ்ருதயம் - சூத்திரம் 42.

## வேதம் பல விதம்

வேதம் பலவிதம், ருக். யஜுர், ஸாமம், அதர்வணம் என்னும் பிரிவு போன்று ஸம்ஸ்க்ருதம், திராவிடம் என்கிற பிரிவும் உண்டு.

'செந்திறத்த தமிழ் ஓசை வடசொல் ஆகி' என்று திருமங்கை ஆழ்வார் பாடுகிறார்.

வடமொழி மறையோடு ஒரு சேரப் பேசப்படுவதோடன்றி "செந்திறத்த தமிழ்" என்று சிறப்பித்து வடமொழிக்கு முன்னதாகக் கூறப் பெறுவதாலும் தென்மொழியும் அநாதி என்பது தேற்றம்.

'என்றுமுள தென் தமிழ்' அகத்திய முனிவரால் விளக்க முற்றது. ஆகஸ்த்யம் எனும் தமிழ் செந்திறத்த தமிழ் என்ற சிறப்புடன் திகழ்கிறது. என்றுமுள தன்மை இவ்விரு மொழிகளுக்கு மட்டுமே உளது. கல்பந்தோறும் தொடர்பவை இவை.

தென் என்பது இனிமையைக் குறிக்கும். கலை என்னும் சொல் வேதம் என்ற பொருளைத் தரும். ஆக தென்கலை என்ற சொல் வடிவில் இனிய வேதப் பொருளை நாம் எளிதில் அறியலாகும்.

'செந்தமிழும் வடகலையும் திகழும் நாவர்' தென்னகத்தில் பலரும் உண்டு. தமிழ்க்கூறு நல்லுலகுக்கு வடவெல்லை திருவேங்கடம்.

வேதஒலியின் சரியான உச்சரிப்புக்காகவும், செம்பொருளின் சுவைப் பயனை நுகரவும் முனிவர் பலர் தென்னகம் போந்தனர்.

வடக்கே வேங்கடத்துக்கு அப்பால் இத்தகைய செந்தமிழ் வழக்கு அரிதாயிற்று. ஸம்ஸ்க்ருத வேதம் மட்டுமே அங்கெல்லாம் நடையாடியது; செந்தமிழ் மறையும், ஸம்ஸ்க்ருத வேதமும்

ஒருங்கிணைந்து உபய வேதச் செம்பொருள், முழுவேதத்து அமுதம் தென்னாட்டவர், தமிழர் பெற்ற நற்பேறாகும்.

## வேதக்கிளைகள்

வடமொழியில் நால்வேதத்துக்கும், அங்கம், உப அங்கம் என்று கிளை பல உண்டாயிருக்க, தமிழ் வேதத்துக்கு அச்சிறப்பு கூடுமோ எனில்.

நம்மாழ்வாரின் வேத ஸாரமான நூல் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி, இவை நான்கினுக்கும், 'இருந்தமிழ் நூற்புலவன் மங்கையாளன்' 'மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்த' சிறப்பினைப் பெற்றார்.

1. பெரிய திருமொழி, 2. திருக்குறுந்தாண்டகம், 3. திருவெழுகூற்றிருக்கை, 4. சிறிய திருமடல், 5. பெரிய திருமடல், 6. திருநெடுந்தாண்டகம் என ஆறு பனுவல்களை அவர் தமிழ் மறைக்கு அங்கமாக அருளினார்.

இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு மறைகளுக்கு அங்கங்களாக உள்ளவை, சீக்ஷா, வ்யாகரணம், நிருக்தம், சந்தஸ், கல்பம், ஜோதிஷம் என்கிற ஆறும் போன்று நம்மாழ்வாரின் மறை நான்குக்கும், திருமங்கை ஆழ்வாரின் ஆறு பனுவல்கள் அங்கமாகின்றன.

ஆழ்வார்கள் பதின்மருள் இவ்விருவரேயன்றி மற்றுள்ள பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார், திருமழிசைப்பிரான், குலசேகரர், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியார், திருப்பாணர் ஆகிய எண்மர் அருளிய நன்மாலைகள் உப-அங்கங்களாகக் கருதப் பெறுவன.

வேதத்துக்கு எட்டு உப - அங்கங்கள் உண்டு. அவை :

1. மீமாம்சை, 2. ந்யாயம், 3. புராணம், 4. தர்ம சாஸ்த்ரம், 5. ஆயுர் வேதம் 6. பரதம், 7. சிற்பம், 8. கீதம் ஆகியன. இவற்றுக்கு வேதங்களே தலையானவை. அதே போன்று நம்மாழ்வாரின் நான்கு மறை நூல்களே தலைசிறந்தவை.

## வேதத்தன்மை

வேதத்தன்மை முழுதும் வாய்ந்தது திருவாய்மொழி. 'சாஸனாத்' - சாஸ்திரம்; கட்டளை இடுவதால் வேதம் பகவானின் ஆணை ஆகிறது. மற்றும் குற்றமற்றது, செவி வழி வருவது, உண்மை உரைப்பது, அநாதியானது, அழிவற்றது - ஆகையால் வேதத்திற்கு

ஏற்றமுள்ளது. நம்மாழ்வாரின் நூல்களுக்கும் இத்தகைய ஏற்றம் உண்டு.

"வேதநூல் - இருந்தமிழ் நூல்; ஆக்ஞை - ஆணை; வசையில் - ஏதமில்; சுருதி - செவிக்கினிய; ஓதுகின்றது உண்மை - பொய்யில் பாடல்; பண்டை நிற்கும் - முந்தை அழிவில்லா என்னும் லக்ஷணங்கள் ஒக்கும்'' என்ற ஆசார்யஹ்ருதயம் 45ஆம் சூத்திரமும் அதற்கு மாமுனி விரிவுரையும் இதனை விவரித்துத் தெளிவிக்கும்.

## திருந்திய வேதம்

வடமொழி வேதம் கடல்நீர் போன்றது. நம்மாழ்வார் ஆகிற மேகம் அதனைப் பருகி உவர்ப்பைத் தவிர்த்து குடிநீர் ஆக்கி இன்னார், இனயர் என்று வடமொழி வேதம் பெற்றுள்ள வரையறை, யாதுமின்றி எல்லாருக்கும் நற்பயன் நல்குவது. 'இன்ப மாரியாய்' நான்கு திவ்யப் பிரபந்தங்களை நம்மாழ்வார் வாயிலாக திருமாலே அருளினான். அருள்மிக்கது திருவாய்மொழி. இந்நான்மறை நூல்களே திராவிட வேதாந்தங்களாம்.

குறிப்பாக சாமவேத சாந்தோக்ய உபநிஷத்தில் உயர்ந்த பகுதி 'உத்கீதம்'. நம்மாழ்வாரின் திருவாய்மொழி - 'உத்கீதத்தின் உள்ளுறை பொருளை வெளிப்படுத்தும் முறையில் 'உயர்வற' என்று தொடங்கி 'ஆயிரம் இன் தமிழ்' அந்தாதியாகத் தொடர்ந்து 'உயர்ந்தே' என்ற சொல்லில் நிறைவுறுகிறது.

'நாவினுள் நின்று மலரும் ஞானக் கலைகளுக்கெல்லாம் ஆவியும், ஆக்கையும் தானே' எனத் திருமாலால் அருளப் பெற்றவர் சடகோபர்.

## மந்திரப் பொருள்

'சொல்லும் க்ரமம் ஒழியச் சொன்னாலும் தன் சொரூபம் (தன்தேற்றம்) கெட நில்லாது' என்ற முமுக்ஷுப்படி சூத்திரத்திற்கு ஏற்ப வேதச் சுருக்கான 'ஓம்' என்னும் பிரணவத்தின் அகவாய் எழுத்துக்களை (அ.உ.ம) முதற் பாசுரத்தில் உயர்வற, மயர்வற, அயர்வறும் என்று வைத்து திருவாய்மொழியை ஆழ்வார் தொடங்குகிறார்.

வேதச் சுருக்கான திருமந்திரப் பொருளை விவரிப்பது 'துவயம்' என்னும் மந்திரம். அம்மந்திரத்தின் பொருளை பத்துப் பத்தாக நூறு பதிகங்களில் விவரித்து தீர்க்க (நீண்ட) சரணாகதியாக விளங்குகிறது திருவாய்மொழி.

## உட்பொருள்

"மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள் நிற்கப்பாடி என்நெஞ்சுள் நிறுத்தினான் தக்க சீர் சடகோபன்" என்பார் மதுரகவி.

வடமொழி வேதத்தை ஓதுவோர் வேதியர். வேதத்தின் உட்பொருள் திருவாய்மொழி கற்போர் ஸ்ரீவைஷ்ணவர்.'வேதத்தின் உட்பொருள்' அறிந்து மேலைத் தலைமுறையானவர்களே தென்னாச்சார்யர்கள் அல்லது தென்கலை ஸ்ரீவைஷ்ணவர்கள்.

ஆழ்வார்கள் காட்டிய பொருள் உணர்ந்து நமக்கு ஆழ்வார் களையும் அருளிச் செயல்களையும் பயில்வித்தவர்கள் ஆசார் யர்கள். இருள்தரு மாஞாலம், தாமஸரும், ராஜஸரும் விஞ்சி நின்று கொடுமை இழைக்கும் கொடு உலகம் இது.

## இடையூறுகள்

இங்கு வன்முறைகளும், வஞ்சனைகளும் வழிபாட்டு நெறி களுள் புகுவது இயல்பு. நான்முகனைப் படைத்து அவர் மூலம் தேவர். மனிதர், பறவை, விலங்கினம், தாவரம், புழு, பூச்சி போன்ற நால்வகை, உடலில், எழுவகைப் பிறப்பில் உயிர்களை இணைத்து அவற்றைக் காத்து முடிவில் தன்னுள் மறைப்பவன், இறைவன் 'திருமால்'.

இவ்வுலகில் நல்லவர் காத்து, அல்லவர் தேய்த்து, அறம் தலைநிறுத்த அவ்வப் போது 'திருமாலின்' அவதாரம் நிகழ்கிறது. வேதத்திற்கு மதுகைடபர்களால் விபத்து நேர்ந்தது போன்று ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கும், அறிவிலிகளால் இடைக்காலத்தில் மறைவு ஏற்பட்டது. "தாழ்வொன்றில்லா மறை தாழ்ந்து தல முழுதும் கலியே ஆள்கின்ற நாளில்" நாதமுனி முதலான நம் தேசிகர்கள் தோன்றி விட்டனர்.

மதுரகவி சொற்படி வேதத்தின் உட்பொருளைத் தேடி அலைந்து, நாதமுனிகள் தம் யோகத்திறனால் நம்மாழ்வாரிட மிருந்து "நாலாயிரமும்" மீட்டுப்பெற்றார். நாலாயிரம் நம்முடைய வாழ்வாயிற்று என்கிறார் வேதாந்த தேசிகன்.

## ஐந்து செம்பொருட்கள்

அறிவுடைய ஆத்மாக்கள் யாராயினும், அறிய வேண்டிய செம்பொருள்கள் ஐந்தையும் இருபது திருவாய்மொழிகளில் தெளிவுறுத்தியுள்ளார் நம்மாழ்வார். இவையே வேதம் காட்டும் செம்பொருள் ஐந்து.

1. அவரவர் தமதமது அறிவறி வகை இறைநிலை பல; அவற்றுள் மிக்க இறைநிலை எது? பெண்மை கலந்த ஆண்மை நிறைந்த திருமால் தத்துவம்.

2. அறிவுள்ள மனிதன் தன் உண்மை நிலை எது? உயிர்நிலை பற்றிப் பல கருத்துக்கள் இருப்பினும் அவற்றுள் மெய்யாம் உயிர்நிலை எது? திருமால் அடியான் என்பதே.

3. பகுத்தறிவு படைத்த மனிதனுக்குப் பல நெறிகள் உண்டு. அவற்றுள் உயிரின் உய்வுக்கு ஏற்கத்தக்க நெறி யாது? உடல் பிணிப்பிலிருந்து விடுபட்டு இறைவன் பிடிப்பில் ஆட்படுதல்.

4. தக்க நெறியில் செல்லும் பெருமக்களுக்குத் தடையாகித் தொக்கியலும் ஊழ் வினைகள் எவை? அவை பற்றி அறிதலும் வேண்டும். ஆக்கை வழி உழலாமல் ஆன்மிக அறநெறி நடத்தல்.

5. அறிவறிந்த மக்கள் பெறும் உயரிய நல்வாழ்வு எது? இறை உணர்வுடன். "தெரித்து, எழுதி, வாசித்து, கேட்டு, வணங்கி வழிபட்டுப் பூசித்துப்" பொழுது போக்குவதே நல்வாழ்வு.

இவ்வைந்து செம்பொருள் நல்கும் நல்வாழ்வு பற்றிய தெளிந்த ஞானம் அருளுவது, திருவாய்மொழி.

இந்த 'அர்த்த பஞ்சகமே திருமந்திரத்தின் திரண்ட பொருள். திருமந்திர விளக்கமே திருவாய்மொழி'. இதனை 'அறியக் கற்று வல்லார் வைஷ்ணவர் ஆவர்' என்பது நம்மாழ்வார் அளித்த தீர்ப்பு.

## விஷ்ணு காயத்ரி

(அனைத்து வேதங்களிலும் துருவித் துருவிப் பார்த்தபோது)

உளன் - சுடர்மிகு சுருதியுள் - ஸத்: உடல் மிசை உயிர் என - ஆத்மா; கரந்து எங்கும் பரந்துளன் - ப்ரஹ்மம் - என்ற பொதுமைக்குச் சிறப்புப் பெயர் பெற்றோன் யார்?

சிவனா, அவரைப் படைத்த பிரமனா? இல்லை, இல்லை, கடவுள் தன்மை பற்றிய வேதமந்திரங்கள் (பெயர்கள்) எண் ணற்றவை. அவற்றுள் இறைவனின் பரந்துள தன்மையைக் காட்டுபவை மூன்று திருநாமங்கள் மட்டுமே. அவை விஷ்ணு, வாசுதேவன், நாராயணன் - என்பனவாகும். அந்த மூன்றை யுமே 'விஷ்ணு காயத்ரி' இணைத்துக் கூறுகிறது.

**நாராயணாய வித்மஹே வாசுதேவாயதீமஹி**
**தந்நோ விஷ்ணு: ப்ரசோதயாத்**

*- விஷ்ணு காயத்ரி*

## கடவுள் (பிரஹ்ம) விளக்கம்

1. என்றும் எங்கும் பரந்துள தத்வம் விஷ்ணு: (ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்).

2. பெயர் வடிவுள்ள எப்பொருளிலும் உள்ளும் புறம்புமாய் நிற்பவன் (வசு - பொருள்) வாசுதேவன் - (ஸர்வத்ர வஸதி இதி வாஸுதேவ:).

3. காலம், இடம், பொருள் அனைத்திலும், அகத்தும், புறத்தும் உறைவதோடு, அவற்றின் இருப்பு (ஸத்தை) நீடிப்பு (ஸ்திதி), செயல்பாடு (ப்ரவிருத்தி), செயலறுதல் (நிவ்ருத்தி) அனைத்தும், தன் அதீனமாய் ஆள்பவன் நாராயணன். விஷ்ணு காயத்ரியின் கருத்தை ஆழ்வார்.

திடவிசும்பு எரி வளி நீர் நிலம் இவை மிசை
படர் பொருள் முழுவதுமாய் அவையவைதொறும்
உடல்மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே.

என்கிறார். எங்கும், எதிலும் என்றும் உளன் திருமால்.

ஊழி தோறூழி உலகம் உண்ட பெருவாயன், உலப்பில் கீர்த்தி அம்மான், அரன், அயன் என உலகு, அழித்து அமைத்து உளன்.

## நாராயண தத்துவம்

'அனைத்துலகும் தன்னுள்ளே நிற்க, நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்' என்று ஆழ்வார் கூறுவது நாராயணன் என்னும் பெயர் விளக்கமாகும். அறிவுள்ள, அறிவற்ற இவற்றை உடலாகக் கொண்டவன். பரமாத்மா நாராயணன், என்பது வேதத்தின் தீர்ப்பு - இதுவே விசிஷ்ட அத்வைதம்.

தான் 'நினைந்த எப்பொருளுக்கும் வித்தாய், முதலில் சிதையாமல்' அவற்றுள் ஊடுருவியும் அவையனைத்தையும் தன் னுள் ஒடுக்கியும் நிற்பவன். நாராயணன். 'அந்தர் பஹிச்ச: தத்ஸர்வம் வியாப்ய நாராயண ஸ்தித:' என்கிறது வேதம்.

வேதம் தமிழ் செய்த மாறனின் திருவாய்மொழியில் விளக்கம் பெறாத தத்துவம் வேறு இல்லை.

## மந்திர விளக்கம்

பிரணவத்தின் விளக்கம் திருமந்திரம். அதன் விரிவு 'துவயம்'. அதை ஏற்றுத் தன் தாள் பணிவோர் பாவங்கள் போக்கி, புண்ணியனாக நின்று, 'கவலையுறாதே' என அபயமளிக்கிறான் கண்ண பெருமான்.

திருமந்திரம், துவயம், கீதையின் சரமசுலோகம் மூன்றையும் இரகசியங்களாக வைத்து, ஆசார்யன் மூலம் உபதேசமாகப் பெறுவது ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயம் (மரபு).

ஸ்ரீவைஷ்ணவன் அறிய வேண்டிய இரகசிய மந்திரங்களை மூன்று நிலைகளில் வெளியிட்டவனும் நாராயணனே. பத்ரிகாசிரமத்தில் நாராயண ரிஷியாக ஆசார்யனும், நரனாகிய சிஷ்யனுமாகி, பகவான், திருமந்திரத்தை வெளியிட்டான். குருவும், சிஷ்யனும் தானே ஆனதால் பகவான் தன்னளவில் நின்றுவிட்டது இவ்வுபதேசம்.

அடுத்து, 'துவய' மந்திரத்தை 'ஸ்ரீ வைகுண்டம்' என்னும் பாற்கடலில் பரமன் தன் தேவியான திருமகளுக்கு உபதேசித்தான்.

பகவானே உபாயம் (அடைவிக்கிறவன்) உபேயம் (அடையத் தக்கவன்) என்று நெறிவாசல் தானேயாய் நின்ற நிலை காட்டி, அருளினான். இன்பச் சூழலில் பரமபோக்யமாக அமைந்தது இம்மந்திரம். இது மந்த்ர ரத்னம் எனப் பெறும்.

மூன்றாவது இரகசியம் - கீதாசார்யன் அர்ஜுனனை சிஷ்யனாக வைத்து 'உலகோர் அனைவரும்' பொதுவாய் - ஏற்கும் வகையில் "மனிதனே! உன் தலைச் சுமையை என் தாளில் போட்டு, என்னையே ரட்சகனாகச் சிந்தித்திரு. எத்தகைய பாவத்திலிருந்தும் உன்னை விடுவிப்பேன்; கவலையுறாதே" என்று கண்ணன் கூறுகிறான்.

"கறுத்த மனம் ஒன்றும் வேண்டா
கண்ணன் அல்லால் தெய்வமில்லை",
"கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே".

என்று அறுதியிட்டு, உறுதியாக உபதேசிக்கிறார் நம்மாழ்வார். 'நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்' என்று மங்கை மன்னன் அதனை ஏற்று 'நானும்' சொன்னேன், நமரும் 'உரைமின்' என்று நமக்கு ஆணையிட்டார்.

## இரகசியம் வெளிப்பட்டது

அந்த ஆணையை இரகசியமாக்கி ஓராண் வழியாய், முன்னோர் உபதேசித்து வந்தனர். இராமானுசர் மக்களின் அறியாமை நிலை கண்டு இன்னருள் சுரந்து, 'ஆசையுடையோர்க் கெல்லாம் கூறுமின்' என்று பேசி வரம்பு அறுத்து வெளியிட்டார். அந்த மரபின்படி இரகசிய மந்திரங்கள் வெளிவந்தன.

"குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார்படு துயர் ஆயின
எல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள் விசும்பருளும் அருளொடு
பெருநிலம் அளிக்கும்
வலம் தரும் மற்றும் தந்திடும் பெற்ற தாயினும் ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்"

இப்படி - உலகை உய்விக்க வழி பிறந்தது.

பராங்குசர் (நம்மாழ்வார்), பரகாலர் (திருமங்கை மன்னன்), யதிவராதிகள் (இராமாநுசர் - அவரது சிஷ்யர்கள்) மூலம் நமக்குக் கிடைத்து வரும் ரகசியம், தகுதியுடையோர்க்குத் தக்க பயன் அளித்து வருவது மறுக்க முடியாத உண்மை.

திருமந்திரத்தில் ஒரே ஒரு முறை பயிலும் 'நாராயணாய', திருமகளுடன் சேர்த்து உபாயம், உபேயம் இருமுறைகளிலும் பயிலும் நெறியாக அமைந்தது துவயம்.

மேற்சொன்ன மந்திரங்களை அடையத் தடையாகவுள்ள அனைத்தையும் போக்கி, தனக்குவமை இல்லாதவன் தன் தாளிணைக் கீழ் இருத்தி, நம்மை உய்விப்பவன் கண்ணன்.

## குரு பரம்பரை

இரகசியங்களை உபதேசிப்பவரே, ஆசார்யன். 'ஆசார்ய லாபம் பகவானாலே' என்கிறது ஸ்ரீவசன பூஷண திவ்ய சாஸ்திரம்.

லக்ஷ்மி நாதனிடமிருந்து தொடங்கும் ஆசார்ய சிஷ்யத் தொடர்பு சேனைநாதன் மூலம், நம்மாழ்வார், மதுரகவிகள் நூல் வழி அவரது அருள் பெற்ற நாதமுனிகள், உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி, ஸ்ரீ ஆளவந்தார், பெரிய நம்பி, எம்பெருமானார், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை உலகாரியர், திருவாய்மொழிப் பிள்ளை, மணவாள மாமுனி என்று பூர்வாசார்ய பரம்பரை தொடர்ந்து முடிவு பெறுகிறது. மாமுனியை யிட்டு முதன்மையும் பெறுகிறது.

ரகசியங்களான மந்திரங்கள் குரு பரம்பரையினர் மூலம் சாமானியரான நமக்கும் கிட்டும் வகையில் ஆசார்ய திருமாளிகைகள், ஜீயர் மடங்கள், மற்றும் தகுதியுள்ள ஆசார்யர்கள் வாயிலாக வருகின்றன.

## அடியார்க்கு ஆட்படுதல்

"மந்திரத்திலும் மந்திரத்திற்கு உள்ளீடான வஸ்துவிலும், மந்திரப் பிரதனான ஆசார்யன் பக்கலிலும் பிரேமம் கனக்க உண்டானால் கார்யகரமாவது" என்பது முமுக்ஷுப்படி.

முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசன பூஷணம் என்னும் மூன்று நூல்களும் பிள்ளை உலகாரியர் அருளியது. எம்பெருமானார் ரகசிய நூல் ஏதும் எழுதவில்லை. அவரால் திருத்திப் பணி கொள்ளப் பெற்ற யஜ்ஞமூர்த்தி என்னும் வேதாந்தி, அருளாளப் பெருமாள் எம்பெருமானாராகத் திருந்திய பின் "ஞானஸாரம்" "பிரமேய ஸாரம்" என்னும் இரு தமிழ் நூல்களில் தத்துவம் (உண்மை), இதம் (நன்மை), புருஷார்த்தம் (இனிமை) பற்றியும், அடியார்க்கு அடிமை புகுவது ஆசார்யனையே தஞ்சமாகப் பற்று வது குறித்தும் எளிய இனிய தமிழ்ப் பாக்களில் அருளியுள்ளார்.

திருமாலை வழிமடக்கி திருமந்திரம் பெற்ற திருமங்கை மன்னன் 'நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றதும், உன்னடியார்க்கு அடிமை' என்று திருமந்திரப் பொருளை அறுதியிட்டார். அதனை அடியொற்றியது 'ப்ரமேய ஸாரம்', ஆழ்வார்கள் பலரும் பல இடங்களிலும் அடியார்க்கு ஆட்படுவதன் அவசியத்தை வற்புறுத்தினர்.

எம்பெருமானார் காலத்திற்குப் பின் பட்டர், அஷ்ட ச்லோகியில் ரகஸ்யார்த்தங்களை வழங்கினார். பின்னர் நஞ்சீயர், நம்பிள்ளை போன்ற உபய வேதாந்த வித்தகர்கள் தமது விரிவான உரை நூல்களில் ஆங்காங்கே ரகசியங்களுக்கு விளக்கமளித்தனர்.

## ஸ்ரீவைஷ்ணவ வளர்ச்சி

அருளிச் செயல்கள் நாலாயிரத்துக்கும் உரை அருளிய, பெரிய வாச்சான் பிள்ளை, 'பரந்த ரகஸ்யம்' 'மாணிக்க மாலை' போன்ற தனி நூல்களில் இரகசியங்களை வெளியிட்டார்.

அவரைத் தொடர்ந்து வடக்குத் திருவீதிப் பிள்ளையின் குமாரர்களான பிள்ளை லோகார்யர், பதினெட்டு ரகஸ்யங்களும், அவரது தம்பி அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்ய ஹ்ருதயம் என்னும் அரிய நூலும் அருளி, ரகசியப் பொருளைப் பரக்க அறிவித்து ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயை நாடெங்கும் வளர்த்தனர். இவ்விருவர் நூல்களே தென்கலை ஸ்ரீ வைஷ்ணவத்தின் முதுகெலும்பு எனலாம்.

வேத, இதிஹாஸ, புராணங்கள், தர்ம சாஸ்திரங்கள், வேதாந்த ஸாரமான அருளிச் செயல்கள், அவைகளுக்கு அமைந்த உபய

வேதாந்த ஆசார்யர்களின் வியாக்யானங்கள், அனைத்தினின்றும் பிழிந்தெடுத்து, வடிகட்டியது தென்கலை ஸ்ரீ வைஷ்ணவம்.

## ஸார, அஸார விவேகம்

வேதத்துக்குப் புறம்பான கொள்கைகள், அசாரம், வேதத்தை ஒப்புக் கொண்டு பொருந்தாத பொருள் கூறுவது அல்பசாரம். வேத வேதாந்தங்களுக்குப் பொருந்திய பொருள் அமைவது விசிஷ்டாத்வைதம் என்னும் சாரம். அதனுள் அருளிச் செயல் வழி வந்த ஸ்ரீவைஷ்ணவ நெறி ஸாரதரம். அதனுளும் பூர்வாசார்ய வழியில் நின்று பொருள் கூறுவது ஸத்ஸம்ப்ரதாயம் - ஸாரதமம். இந்தத் துறையில் ஈடுபடும் அடியார்கள் வர்ணாசிரம தர்மங்களை வலியுறுத்தாது பகவத், பாகவத, ஆசார்ய கைங்கர்யமாகிற ஸ்ரீவைஷ்ணவ தர்மத்திலேயே ஊன்றி நிற்பர். அவர்களது அனுட்டானங்கள் வைதிகர்களின் சடங்குகளிலிருந்து வேறுபட்டு இருப்பது இயல்பு.

## கைங்கர்யபரர்

எம்பெருமான் உகந்தருளும் கோயில்கள், ஆழ்வார், ஆசார்யர்கள், ஞான, அனுட்டானங்களை ஏற்று அதிலேயே மண்டியிருப்பர் தென்கலை வைணவர்கள். தமது அநுட்டான மெல்லாம் இறைவன் அருளுக்குப் பாத்திரமாகும் செயலே யன்றி மோட்ச உபாயமாக மாட்டா என்பது தென்கலைக் கருத்து.

## அடிப்படைக் கொள்கை

ஒருவனைத் திருத்திப் பணி கொள்வதைத் தன் பேறாகக் கருதுகிறான் பகவான். 'சேதன லாபம் புருஷோத்தமனுக்கு' - என்கிறது ஸ்ரீவசன பூஷணம். அவனது அருளே உபாயம். அவன் அருளல்லது அருளுமல்ல, பல்லார் அருளும் பழுது. அருள் முடிவது ஆழியான் பால் என்பது திண்ணம்.

'ப்ராப்தாவும், ப்ராபகனும், ப்ராப்திக்கு உகப்பானும் அவனே' என்பது ஸ்ரீவசன பூஷணம். அதாவது நம்மை அடைபவன், அடைவிக்கிறவன். அடைதலுக்கு உகக்கிறவன் இறைவனே என்பது இதன் கருத்து. மற்றும் தென்கலைக் கொள்கைகளில் சில காண்போம் :

விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்கு சரீர ஆத்ம பாவம் (உடல், உயிர் தொடர்பே) அடிப்படை. இறைவன் ஒருவனே மற்றெல்லா உயிர்கள், அவை உறையும் உடல்கள், அனைத்தையும் தனக்குச் சரீரமாகக் கொண்டவன். இதனை ஏற்றுக் கொண்டால், வேதத்தில்

உள்ள, முரண்பாடுகளை எளிதில், களையலாகும். இதனை உணர்ந்தவன் முன் எந்த அறிஞனும் எதிர் வழக்காட முடியாது என 'யத் யேதம் யதி ஸார்வ பௌமதிதம்' என்று வரும் ச்லோகத்தில் வேதாந்த தேசிகர் தமது ரகஸ்யத்ரயத்தில் தெரிவிக்கிறார்.

'உடல் பெறும் சுகம் ஆத்ம இன்பமே' என்பது போன்றே, நமது இச்சை அனைத்தும் நம்மைச் சரீரமாக உடைய பரமாத்மாவுக்கே உரியது என்பது தான் தென்கலைக் கருத்து. மற்றும் சில முக்கியக் கருத்துக்கள் வருமாறு :

## தென்கலைக் கருத்துக்கள்

1. எம்பெருமான் இயல்பாகவே கருணை உள்ளவன். அதற்கு வேறு காரணம் எதையும் கூற இயலாது. (நிர்ஹேதுகம்)

2. பகவானை நாம் பற்றுவது அவனது அருளினாலேயே.

3. ஞானியை அடைவது எம்பெருமானின் பேறு.

4. நாம் அவனைப் பற்றுவதைக் காட்டிலும் அவன் நம்மைப் பற்றுவதே சாலச் சிறந்தது.

5. நம்மை அவனுக்குத் தரும் உரிமை நமக்கில்லை; இது அவனுடைமை என்பதால் (தந்த நீ கொண்டாக் கினையே).

6. அவனே ஆறும் (வழி) பேறுமாய் இருக்க நாம் வேறு வழி தேடலாகாது.

7. இறைவனின் பரந்துள தன்மை குறித்து 'அணுவைச் சத கூறிட்ட கோணிலும் உளன்' என்பதே தேறிய கருத்து.

8. இறைவன் நம் குற்றங்களையும் நற்றமாகக் கொள்ளும் குணமுடையவன் (வாத்ஸல்யம் - தாய்ப்பசுவின் தன்மை).

## பிராட்டி தத்துவம்

9. பகவானின் கருணைப் பெருக்கு, அவனையும் ஆட் கொள்ளும்.

10. உபாயமும், உபேயமுமான பகவானின் திருமேனியில் பிரிவின்றி இடம் கொண்ட பிராட்டிக்கு, புருஷகாரம் (சிபாரிசு செய்தல்) மட்டுமே உண்டு. உபாயமாக ஆதல் பொருந்தாது.

11. புருஷகாரத்வமே பிராட்டியின் தனித் தன்மை.

12. மூவகைக் காரணமும் பகவானாயிருக்க, காரண தசையில் பிராட்டியின் நிலை முன்னிலை (ஸந்நிதானம்) மாத்திரமே.

13. பிராட்டியை ஜீவகோடியில் வைத்து, தன் மார்பில் இட்டு எம்பெருமான் உகப்பதே அவன் குணபூர்த்தியைக் காட்டும். கருணையின் வடிவே பிராட்டி. இறைவன் இட்ட வழக்காய் இருப்பவள். அவன் ஒருவனுக்கே உரியவள். ஆதலால் 'ஈச்வரீம் ஸர்வ பூதானாம்' - அனைத்து ஜீவாத்மாக்களுக்கும் தலைவி ஆகிறாள்.

14. பகவானைப் பற்றி நிற்கும் அடியார்களுக்கு அவர்களது உடலைப் பற்றி வரும் வருண, ஆசிரம தர்மங்கள் நழுவிவிட லாகும். பகவத், பாகவத கைங்கர்யமே நிலைக்கும்.

15. தீண்டாமை என்பது ஆசாரம், நல்லொழுக்கம், அல்லாதவை, (அநாசாரம்) தூய்மை, அல்லாதவை காரணமாக உண்டாவது, பிறவி காரணமாக வருவது அன்று. வருண - ஆசிரமங்கள் தர்மங்களேயன்றி பிறவிச் சாதிகள் அல்ல.

16. உடல் சேர்க்கை இன்பம் தவிர்ப்பது உயிர்களுக்கு ஆக்கம் தரும்.

17. பரமனைக் கிட்டிப் பணிபுரிதலே பேரானந்தம். அறிவும், ஆனந்தமும் உடைய அணுவான ஜீவன் தன்னைத் தானே அநுபவிப்பது தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் (கைவல்யம்).

18. கர்மானுஷ்டானங்களைச் சுருக்கிக் கொண்டு, கைங்கர்யங் களைப் பெருக்கிக் கொள்வதே தென்கலை நோக்கமாகும்.

19. இறைவனுக்கு நமது இசைவினை வெளிப்படுத்த ஒருமுறை கைகூப்பி தண்டனிடுதல் தென்கலையில் போதுமானது.

20. விதவைகளுக்குத் தலை மழித்தல், ஏகாதசியில் சிராத்தம் இவை கூடா. ஸ்ரீ ஜெயந்தி விழாவுக்கு திருநட் சத்திரமே முக்கியம் போன்ற மற்றும் பல கருத்துகள் உள. விரிவஞ்சி நிற்கலாயிற்று.

முடிவுரை : அறிவியலும் ஆன்மிகமும் இணைந்த ஒரு தரிசனம் ஸ்ரீ ராமாநுஜ சித்தாந்தம். உடல் (அசித்து), உயிர் (சித்து), இறைவன் (கடவுள்) இம் மூன்றும் என்றும் உள்ளவை. இது தத்துவ த்ரயம். இந்த முப்பெருந் தத்துவங்களே நிலையானவை. பிரிக்க முடியாதவை. இது வேத உபநிடதக் கருத்து.

## விஞ்ஞானமும் வேதாந்தமும்

விஞ்ஞானத்துறையும், தத்துவ ஞானத்துறையும் ஒன்றுக் கொன்று இணக்கமானவை. இவற்றை விவேகித்து முறைப்படுத் திப் பயன்படுத்துவதே பகுத்தறிவின் பயன்.

## தத்துவ முடிவு

காண்கின்ற உடலில் காணாமல் உறைகின்ற உயிரில் கருதற்கரிய உயிர்க்கு உயிராய் பரந்து நிற்கின்ற பரம்பொருளின் பான்மையை விளக்குவதே விசிஷ்டாதவைதம். இது ஸ்ரீ வைஷ்ணவத்தின் உயிர்க்கொள்கை. திட விசும்பு எரி வளி என்ற பாசுரத்தில் இதனை வெளியிட்டுள்ளார் நம்மாழ்வார். இராமானுசர் இதனையே வியாசரின் பிரம்ம சூத்திரத்திற்கு ஸ்ரீ பாஷ்யமாக விரித்துக் கூறினார். ஸ்ரீ சுதர்சன பட்டரின் 'சுருதப் ப்ரகாசிகை' போன்ற அரும் பெரும் வேதாந்த நூல்கள் இக்கருத்தை அசைக்க முடியாதபடி வலியுறுத்தின, இவை இத்தனைக்கும், சுருக்கமாக நம் போன்ற மந்த மதிகளுக்கும் கிட்டும் நோக்கில் ஸாரமாக 'குட்டி பாஷ்யம்' என்றே கூறும் வகையில் 'தத்துவ த்ரயத்தை' உலகாரியர். சுருக்கி அருள மாமுனிகள் விளக்கி, தெளிவுரை நல்கினார்.

அறிவியலுக்கேற்ற இந்தத் தத்துவ அடிப்படையில் எழுந்த இதிகாச, புராண நூல்களின் கருத்தைச் சுருக்கி, ஸ்ரீ வசனபூஷணத் திலும், மந்திரப் பொருள்களை (மூன்று இரகசியங்கள்) முமுக்ஷுப்படியிலும் பிள்ளை உலகாரியர் அருளினார்.

அவரது தம்பி, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் நம்மாழ்வார் அருளிச்செயலின் திரட்டாக 'ஆசார்ய ஹ்ருதயம்' என்னும் நூலை வெளியிட்டார்.

இந்த நான்கு நூல்களுமே மணவாள மாமுனி உரையுடன் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத் தெளிவை பிறப்பிப்பனவாகும்.

## மற்றும் மாமுனிகள் அருளிய நூல்கள்

பெரியாழ்வார் திருமொழிக்கு 5-1-1 வரை, வியாக்யானம், இராமாநுச நூற்றந்தாதி உரையோடு, திருவாய்மொழி நூற்றந் தாதி, ஆர்த்தி ப்ரபந்தம் போன்ற தனி நூல்களும் மாமுனிகளின் மாண்பினை எடுத்துக் காட்டுவனவாகும். வரவரமுனி (மணவாள மாமுனி) நூல்கள் தென்கலை வைணவத் திரட்டாகும்.

அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ
சடகோபன் தண்டமிழ்நூல்வாழ - கடல் சூழ்ந்த
மண்ணுலகம் வாழ - மணவாள மாமுனியே
இன்னுமொரு நூற்றாண்டிரும்

ஸ்ரீமதே ரம்யஜாமாத்ரு முனீந்தராய
ஸ்ரீரங்க வாஸினே பூயாத் மஹாத்மனே,
நித்யஸ்ரீ: நித்ய மங்களம்!

ஆழ்வார், எம்பெருமானார், ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருமால் நெறி

திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவை மிசை
படர்பொருள் முழுவதுமாய் அவைஅவைதொறும்
உடல் மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே.

*- திருவாய்மொழி 1-1-7*

எங்கும் பரந்து எதிலும் கரந்து நிறைந்து, என்றும் நிலைத்துள்ள பொருளுக்குப் 'பரம்பொருள்' என்று பெயர். அப்பொருள் எல்லாவற்றைக் கடந்தும், எதனுள்ளும் கலந்தும் இருப்பதால் 'கடவுள்' என்று வழங்கப் பெறுகிறது. 'பரந்து உளனாம் எங்கும்' என்று இப்படி வியாபித்துப் பரவி நிற்றல் பற்றி வேதம் இறைவனை 'வியாப்னோதி இதி விஷ்ணு:' என்கிறது. இதே போன்று 'ஸர்வத்ர - வஸதி இதி வாஸுதேவ:' என்பதும் வேதம் கண்ட சொல்லாகும். எல்லா விடத்தும் வசிப்பவன் - அதாவது பரவுதல், நிலைத்து நிற்றல் மட்டுமன்றி, தான் பரவியுள்ள பொருள் அனைத்தையும் தானே தாங்கி, தன் கருத்துப்படி இயக்கி, இறைவனாய் என்றும் விளங்குபவன் என்ற முழுக் கருத்தையும் கொண்ட ஒரே சொல் நாராயணன் என்பது.

"தன்னுள் அனைத்துலகும் நிற்க நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்" என்கிறார் நம்மாழ்வார். வேதமும் வேதாந்த விளக்கமான அனைத்து நூல்களும் விவரிப்பது இதனையே.

பெயரும் வடிவமும் உள்ளது பொருள்; ஒவ்வொரு பொருளுக்கும் பெயரும் வடிவமும் இருப்பது போலவே, உயிரும் உண்டு. சொல், கல் என்று நாம் பெயர் இட்டுக் குறிப்பிடும் எந்தப் பொருளிலும் உயிர் உண்டு; உயிருக்கே உரிய அறிவும் உண்டு; ஆனால் அந்த உயிர்களை நாம் காண முடிவதில்லை; நாம் கேட்பதும் காண்பதும் பெயர் வடிவங்களை மட்டுமே; அறிதற்கு அப்பாற்பட்ட, கருதுதற்கு அரியதாய் விளங்குவது உயிர்; கருதுதற்கு அரிய உயிர்க்கும் உயிராய் விளங்குபவன் இறைவன். உயிர்களை உடையவன் இறைவன் என்பதே மறை பகரும் உண்மை.

உயிரின் பொருட்டே உடல் உள்ளதை அனுபவத்தில் அறிகிறோம்; உயிரினமாகிய நாமும், நம் உயிருக்கு உயிரான இறைவன் பொருட்டாகவே உடலுடன் படைக்கப்பட்டி ருக்கிறோம் என்பதை ஊகித்தும் அறியலாமல்லவா? இவ்வாறு

அறிந்து தெளிந்து வாழ்வதே உயிர் வாழ்வின் பயனாகும்; உண்மை உணர்வின் சிறப்பாகும்; இதுவே வேதக் கருத்தும் ஆகும்.

பெயரும் கருங்கடலே நோக்கும் ஆறு, ஒண்பூ
உயரும் கதிரவனே நோக்கும் - உயிரும்
தருமனையே நோக்கும், ஒண்தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கும் உணர்வு.

*- பொய்கையார் முதல் திருவந்தாதி - 67*

உண்மை உணர்வின் சிறப்பை எடுத்துக்காட்டி, உயிர் வாழ்வின் பயனைப் பெற வைக்கும நெறியே ஸ்ரீவைஷ்ணவம். அனுபவத்தை யொட்டிய அறிவியல் வைதிக நெறி, வைணவமே.

## தத்துவ தரிசனம்



**தத்துவம்** (உண்மை) ஹிதம் (நன்மை) புருஷார்த்தம் (பேறு) இம்மூன்றையும் தெளிவுறுத் துவதே ஒரு மதம், தரிசனம் அல்லது சமய சித்தாந்தமாகும்.

ஸ்ரீவைஷ்ணவம் மூன்று தத்துவங்களை அடிப் படையாகக் கொண்ட 'தத்துவ த்ரய' தரிசனமாகும்.

தத்துவ த்ரயம் : "சித்து" (அறிவுள்ள ஜீவன்), "அசித்து" (அறிவற்ற பொருள்) "ஈசுவரன்" பேரறிவாளன், பேராற்றலுள்ள வன்). இவை மூன்றும் இணைபிரியா உண்மைப் பொருள்களாகும்.

அதில் "சித்து" மூன்று வகை : 1. 'பக்தர்' பௌதிக உடலில் கட்டுண்ட ஜீவாத்மாக்கள், 2. 'முக்தர்' பூத உடல் நீங்கி அமர உடல் பெற்றுப் பரமபதம் என்னும் வீடுபேறு பெற்றவர். 3. 'நித்யர்' இறைவனோடு என்றும் பிரியாது உடனுறைந்து அவனை உகப்பிப்பவர்.

அசித்து : மூவகை. 1. 'சத்வ சூன்யம்' (காலம்), 2. 'மிச்ர சத்வம்' (முக்குணம் கலசிய பொருளியல் உலகு இயற்கை), 3. 'சுத்த சத்வம்' பரம பதம் (அறிவியல் உலகு).

ஈச்வரன் (உடையவன்) ஒருவனே! அசித்தை உடலாகக் கொண்ட உயிர்களைத் தனக்குச் சரீரமாய்க் கொண்டு தானிட்ட வழக்காய் இயக்கி, வைக்கும் ஈச்வரன் ஸ்ரீமந் நாராயணனே.

இதனையே,

"முதல் தனி வித்தேயோ! முழு
மூவுலகாதிக் கெல்லாம்"

என்றும்,

"மேவித் தொழும் பிரமன் சிவன்
இந்திரனாதிக் கெல்லாம்
நாவிக்கமல முதற்கிழங்கு"

என்றும்,

"தானோர் உருவே தனிவித்தாய்த்
தன்னில் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
மற்றும் மற்றும் முற்றுமாய்
தானோர் பெருநீர் தன்னுள்ளே
தோற்றி அதனுள் கண்வளரும்
வானோர் பெருமான் மாமாயன்
வைகுந்தன் எம்பெருமானே".

என்று அறுதியிட்டு வைத்தார். ஸ்ரீ வைஷ்ணவத்தின் பிரதம ஆசிரியரான நம்மாழ்வார்; இறைவனால் 'மயர்வற மதிநலம்' அருளப் பெற்றவராகையால் அவரது திருவாய்மொழிக்கு மறுப்புக் கூறுவாரும் உளரோ?

சித், அசித், விசிஷ்டபிரம்மமே - "தத்வம்" உண்மை. "தத்வ நாராயண: பர:" ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்பது ஸநாதன ஸ்ரீவைஷ்ணவ, விசிஷ்டாத்வைத வேதாந்த தரிசனமாகும்.

**இதம்** (நன்மை) : இறைவனை அடையும் நல்நெறிகளாகக் கர்ம (செயல்) ஜ்ஞான (அறிவு) பக்தி (அன்பு) யோகங்களை வேதங்கள் நமக்குக் காட்டின. ஆனால், 'நெறி உள்ளி உரைத்த கணக்கறு நலத்தனன்', 'நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்து ஒரு மூர்த்தி'யான கீதாசாரியன் கண்ணனே, "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய, மாம் ஏகம் சரணம் வ்ரஜ" என்று தன் திருவடிகளையே (ஆசார்யர்களையே) தஞ்சமாகப் பற்றும்படி காட்டினான். "எம்பிரான் சரணே சரண் நமக்கு" "நீர் நுமது" என்று இவை வேர் முதல் மாய்த்து இறை சேர்மின் உயிர்க்கு அதன் நேர் நிலையில்லை" 'களைவாய் துன்பம், களையாது ஒழிவாய் களைகண் மற்று இலேன்' என்றார் நம்மாழ்வாரும்.

**புருஷார்த்தம்** (பேறு) : ஜீவன் அடையத்தக்க நற்பேறுகளான அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றுள், 'கண்ணனுக்கே ஆமது காமம்' என்கிறபடி 'கிருஷ்ணாநுஸ்மரணம் பரம்' 'கிருஷ்ணனிடம் அன்பே பெரிது) கொள்ள மாளா இன்ப வெள்ளம் அதுவே.

இங்கும், அங்கும், எங்கும் 'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும், உன் தன்னோடு உற்றோமேயாவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்'' என்று திருமாலுக்கு அடிமை செய்வதே சிறந்த பேறாக அறுதியிடப் பெற்றுள்ளது. இப்படி **தத்துவ, இத, புருஷார்த்தங்க**ளைத் தெளிவுறுத்துகிறது ஸ்ரீ வைஷ்ணவம்.

**பிரமாணங்கள் :** ஒன்றை உள்ளபடி அறிதற்கு உதவும் சாதனத்தை "பிரமாணம்" என்பர். அந்தப் பிரமாணம் பிரத்யட்சம் (கண்கூடு) அனுமானம் (ஊகம்) சப்தம் (சொல்வழி) என மூன்று வகைப்படும்.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று வகை தெரிவதற்கு உதவும் புலன் ஐந்தும், நன்மை தீமைகளின் விளைவான இன்ப துன்பங்களை நுகர்வதற்கு அமைந்த உள் இந்திரியமும், சேர்ந்து அனுபவத்தில் காண்பது பிரத்யட்சம்.

புகை இருக்குமிடத்தைப் பார்த்து, அங்கே நெருப்பு இருக்கிறது என்று அறிகிறோமல்லவா? இது 'அனுமானம்' - ஊகம்.

ஐம்புலன்களாலும், அனுமானங்களாலும் அறிய முடியாதவற்றை அறியச் செய்வது சப்தம்; அல்லது வேதச் சொற்களாகும். ஆத்ம, பரமாத்ம தத்துவங்களையும் இப்பிரபஞ்சத்தின் முழு உண்மையையும் அறிதற்கு வேத சாஸ்திரங்களே நமக்குத் தஞ்சம்.

## வேதச் சிறப்பு



ஒருவனால் ஒரு குறிப்பிட்ட காலத்தில் படைக்கப்படாமல், என்றும் தன்னாலேயே மற்றப் பிரமாணங்களும் உண்மையாக விளங்க உதவுவதே வேதத்தின் சிறப்பு. ஒருவனால் ஆக்கப் பெற்றதில்லை. (அபௌருஷேயம்) என்பதால், ஒருவனுக்குள்ள ஐயம், திரிபு, மறதி, சோர்வு, வஞ்சகம் போன்ற குறைகள் அற்றது வேத நூல்.

கண்கூடாகவும் ஊகத்தாலும் உணர இயலாதவற்றையே உணர்த்தும் தனிச் சிறப்பால், தனக்கு நிகரின்றித் தானே மேலான

பிரமாணமாக நிற்கிறது வேதம். கடவுளைப் போல், அதுவும் அவன் நினைவில் என்றும் உளதால், படைக்கப்படுவதுமில்லை; அழிவதுமில்லை. கடவுள் காட்டிய வேதம் நமக்கு கடவுளையே காட்டித் தருகிறது. இவை போன்ற சிறப்புக்கள் வாய்ந்தவை மட்டுமே மறைநூல்கள் எனப்படுவன.

## மறையாய நால்வேதம்

இப்போது நமக்குக் கிடைக்கும் மறைநூல்களில 'ருக் வேதம்' - 10 மண்டலங்களையும், 10152 மந்திரங்களையும் கொண்டுள்ளது. வசன நடையில உள்ள யசுர் வேதம் 40 அத்தியாயங்களையும் 1975 மந்திரங்களையும் கொண்டது. இறைவன் உகந்த இசை இன்பம் நிறைந்த சாம வேதத்தில் உள்ள மந்திரங்கள் 1975. போர்க்கருவி அழிவுச் சாதனங்கள், அதற்கான மந்திர தந்திரக் குறிப்புகள் நிறைந்த 'அதர்வண வேதம்' - 20 காண்டங்கள் 5987 மந்திரங்கள் உள்ளது.

எழுதாக் கிளவி, செவிச் செல்வம், மறை, 'சுருதி' என்றெல்லாம் கொண்டாடப் பெறும் வேதங்களிலே மிக்க இறைநிலை, மெய்யாம் உயிர்நிலை, தக்கநெறி, தடையாகி நிற்கும் ஊழ்வினை இறை அருளால் பெறும் நிறை வாழ்வு இவை ஐந்தும் செம்பொருள்களாகக் கூறப்படுகின்றன. வேதப் பகுதியில் 'புருஷஸூக்தம்' தலை சிறந்தது. (வேதேஷு) பௌருஷம் ஸூக்தம். வேதத்தின் முற்பகுதி கர்ம காண்டம், பிற்பகுதி (உபநிஷத்துக்கள். ஞான காண்டம்.

இறை அருள் பெற அவனை உகப்பிக்கும் செயல்களை இயற்கையின் முக்குணங்களான தாமஸ, ராஜஸ, ஸாத்விகங்களான வழிகளில் வகுத்துத் தக்காருக்குப் பொதுவாகக் கூறும் இயல்புடையது வேதம். பல்வகை வேள்விகள், அரிதாயும் பெரிதாயுமான தானங்கள், தியாகங்கள், கடுமையும் கொடுமையும் வாய்ந்த தவங்கள் போன்றவையும் வேதத்தின் கட்டளைகளாக உண்டு.

"காயோடு நீடுகனி உண்டு, வீசு
கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து
தீயோடு நின்று தவம் செய்யும்"

வழிகள் அவை.

கர்ம காண்ட விளக்கமாக, சமுதாயப் பொது அறநெறிகளாகிய கட்டளைகளை சுருதிகளை ஸ்மரித்து (நினைத்து) மனு முதலானோர் செய்த அற நூல்கள் (தர்ம சாஸ்திரம்) ஸ்மிருதிகள் எனப்படுகின்றன. அவற்றுள் 'மனு ஸ்மிருதி' மிகச் சிறந்தது.

சமுதாயமாகிய பந்தலைத் தாங்கும் நான்கு கால்கள் போல, நான்கு வர்ண தர்மங்களையும் பொது அறங்களையும் - தனி அறங்களான ஆசிரம நிலைகளையும் அடிப்படையாகக் கொண்டவை, வியாசர், பராசரர் முனிவர்கள் வெளியிட்ட நூல்கள்.

## வேதாந்தம்

பிரம்ம காண்டம் (உபநிஷத்துக்கள்) வேதாந்தப் பகுதி. அவற்றுள் தசோபநிஷத் (பத்து) மிக மேம்பட்டவை. அவற்றின் விளக்கமாக அமைந்தவை இதிகாசங்கள். பரப்பிரம்மம்தான் இவ்வுலகைப் படைத்துக் காத்து அழித்து விளையாடுகிறது. அதை உணர்ந்து தியானித்து அதனருளால் பிறவித் துன்பத்தை இவ்வுயிர்கள் போக்கிக் கொள்ளலாம் என்பது பிரம்ம காண்டக் கருத்து. இக்கருத்தினை நம்மாழ்வாரின் அடிஇணை போல விளங்கிய கல்வியில் பெரிய கம்பநாடரும் பகவத் ராமாநுஜரும் அடியொற்றினர்.

"உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே"

என்று இராமாவதார நூலுக்குத் தனியன் இயற்றினார், கம்ப நாட்டாழ்வார்.

இதே கருத்தில் வடமொழியில் ஸ்ரீராமாநுஜர் தம் ஸ்ரீபாஷ்யத்துக்கு,

அகில புவன ஜந்ம ஸ்தேம பங்காதி லீலே
விநத விவித பூதவ்ராத ரக்ஷைக தீக்ஷே
ச்ருதி சிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே
பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்தி ரூபா"

என்று பாஷ்யகாரரின் தனியனிலும் கம்பன் கருத்தைக் காணலாம்.

இறைவனுக்கு லீலா விபூதி (இவ்வுலகம்) நித்யவிபூதி (பரமபதம்) இரண்டும் உடைமையாகும். இறைவனது விளையாட்டுக்குரியது இவ்வுலகு. உயிர்கள் தான், தனது என்று எண்ணிச் செய்யும் தம் வினையடியாக அவன் விளையாட்டில் அகப்படுகின்றன. இவ்வுண்மை உணரும் சீவன்கள், தனது எனும் எண்ணம்விட்டு இறைவனிடம் அடைக்கலம் கோரி, அவன்

அருளுக்கு இலக்காகி இவ்விளையாட்டிலிருந்தே விடுபட்டு பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு அற்று ஒளிக்கொண்ட சோதியுமாகி அவனைக் கிட்டி அடிமை செய்து அவ்வுலகில் நித்திய ஆனந்தமடைகின்றன.

## பிரஸ்தான த்ரயம்

'பிரஸ்தான த்ரயம்' என்று போற்றப் பெறும் உபநிஷத்துக்கள், வியாசரின் பிரம்ம ஸூத்ரம், பார்த்தசாரதியின் வார்த்தையான 'பகவத்கீதை' மூன்றுமே இவ்வுண்மைகளை விளக்குவன. உபநிஷத் வாக்கியங்களைக் குறிக்கொண்டு, இதிகாச, புராணங்களும் வியாகரண (சொல் இலக்கணம்) மீமாம்சை (வேதச்சொல் ஆய்வு) துணைகொண்டு வேதாந்த நூல்கள் விரிந்தன. சங்கர, ராமாநுஜ, மத்வ பாஷ்யங்கள் போன்றவை மலர்ந்தன.

## இதிஹாசங்கள்



எனினும், வேதாந்த விழுப்பொருளை விளக்குவதில் வால்மீகியின் இராமாயணமும் வியாஸ பாரதமும் கதை சொல்வதாக அமைந்து, கருத்தைப் புகுத்துவதில் முன் நிற்பன. அதனுள்ளும் "மறை யாய நால் வேதத்துள் நின்ற மலர்ச்சுடரான ஸ்ரீமந் நாராயணன் சக்கரவர்த்தித் திருமகனாய் அவதரித்த போது வேதமும் வால்மீகி முனிவரின் வாக்கில் இராமாயணமாய் வெளிவந்தது என்பது குறிப்பிடத் தக்கது. "இதிகாச சிரேஷ்டம்" இராமாயணமே. மற்றும் பல காரணங்களாலும் பாரதம் கூறும் தூது போனவன் (கிருஷ்ணன்) ஏற்றத்தைக் காட்டிலும், சிறை இருந்தவள் (சீதை) ஏற்றத்தைக் கூறும் இராமாயணம் பரம ஸாத்துவிகமாக விளங்குகிறது.

## புராணங்கள்

இதிகாச உண்மைகளை உருவகங்கள் கொண்டு மேலும் தெளிவுறுத்துபவை புராணங்கள். அவை பதினெட்டு. படைப்புக் கடவுளாம் பிரமனின் வாக்கிலிருந்து வந்தவை. அவை ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என மூவகை. அதில் வசிஷ்டரின் பேரனும் வியாசரின் தந்தையுமான பராசரர் இயற்றிய 'விஷ்ணு புராணம்' 'புராண ரத்னம்' என்று உச்சிமேல் வைத்து மெச்சப்படுகிறது. அதன் விரிவாக விளக்கமாகப் பராசரரின் பேரனும் வியாசரின் மகனுமான சுக முனிவரின் பாகவத புராணம் தலைசிறந்து

விளங்குவது. ஸாத்விக புராணங்களுள் சிறந்தவை இவையே. மற்றும் ராஜஸ, தாமஸ, புராணங்கள் ஸாத்விகர்களால் தள்ளத்தக்கன; அவை ராஜஸ தாமஸர்களான பாமரர்களே கொள்ளத்தக்கன.

இப்படி ஸ்மிருதி, இதிஹாஸ புராணங்கள் அநாதியான வேதக் கருத்துக்களை விளக்கி, எதிர் ஒலிப்பதால் 'உபப்ருஹ்மணம்' என்று கூறப்பெறுகின்றன.

## மறை நுண் பொருள் நூல்கள்



பிரமன் மற்றும் ரிஷிகள் மூலம் பொதுவாக வேதமும், நீதி நூலும் வெளியிட்ட பகவான், தானே நர நாராயணனாய் நின்று வேத ஸார தமமான அர்த்தங்களை ஸாத்விகர் களான வைஷ்ணவர்களுக்குத் தன் அருளாலே வெளியிட்டிருக்கின்றான். இவை 'ஆசார்ய உபதேச' வழியாலே ஏழாட்காலம் (ஏழு தலைமுறை) பழிப் பிலரான ஸ்ரீவைஷ்ணவர்களால், அன்று தொட்டு இன்று காறும் ரகஸ்யமாக ஆதரித்துக் கொண்டாடப் பட்டுப் பின்பற்றி வரப்பெறுகின்றன. வழிவழி வந்து, 'தீயிற் பொலி கின்ற செஞ்சுடர் ஆழி, திகழ் திருச்சக்கரத்தின்' கோயிற் பொறி யாலே ஒத்துண்டு நின்று குடிகுடி ஆட்செய்கின்றோம்" என்கிற கிரமத்தில் "லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்" என்று தொடங்கும் குருபரம்பரையைத் தழுவி, இப்படி மண்மிசை வேர் ஊன்றித் தழைத்தோங்கி நிற்கிறது ஸ்ரீவைஷ்ணவம்.

தாமஸர்களாலும், ராஜஸர்களாலும் இடைஇடையே பல தடைகள் ஏற்பட்டு வைஷ்ணவம் தளர்ச்சியும், தாழ்ச்சியும் உற்றாலும், ஆழ்வார்கள், ஆசார்யர்களால் அவ்வப்போது புத்துயிர் பெற்றுப் பொலிந்து நிற்கிறது. அற அழிக்க வொண்ணாத பரம சாத்விக நெறி திருமால் நெறி.

## பகவானின் ஐந்து நிலைகள்

நீக்கமற எங்கும் நிறைந்த பகவானின், 'பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை' என்னும் ஐந்து நிலைகளிலே அண்ட மனைத்திலும் நின்று, இருந்து கிடந்து, நடந்து அருள்பாலிக்கிறான்.

**பரம் :** திருமகள் (ஸ்ரீ) மண்மகள் (பூதேவி) ஆய்மகள் (நீளா) தேவியரோடு பரமபதத்தில், தன்னைவிட்டுப் பிரியாத அனந்தன், கருடன் விஷ்வக்ஷேனர் - சேனை முதலிகள் - போன்ற நித்யர்,

மற்றும் பூவுலகு வாழ்வைவிட்டுத் தன்னை வந்தடைந்து புனிதரான முக்தர்கள் ஆகியோருக்கு எப்போதும் இன்முகம் காட்டி வாழ்வளிக்கும் பரம ஆனந்த நிலையமே பரத்துவம்.

*வியூகம் :* 'தேவும் எப்பொருளும் படைக்க (தன் நாபிக் கமலமாகிய) பூவில் நான்முகனைப் படைத்த பரமன், மற்றைத் தேவர்களின் குறைகளைக் கேட்டு, அறிவதற்கும் அவர்களது குறைகளைக் களைய, மண்மிசை யோனிகள் தோறும் தன்னைத் தாழவிட்டுப் பிறப்பதற்கும் பாங்காகப் பள்ளி கொண்டிருக்கும் நிலையே வியூகம். இது மூன்று வகையில், பன்னிரு மூர்த்திகளை ஆதாரமாகக் கொண்ட நிலை. கேசவன் முதல் தாமோதரன் உட்பட மூர்த்திகளின் பெயர்களை ஓதாதார் வைதிகர் அல்லர்; மற்றையோர் ஓதுவதும் ஓர்வனவும் அவன் பேராயிரமே. அதில் அநிருத்தன், பிரத்யும்னன், சங்கர்ஷணன் எனும் மும்மூர்த்திகள் முக்கியமானவர்கள்.



*விபவம் :* அறம் தலை நிறுத்த (தர்ம ஸம்ஸ் தாபனம்) நல்லவரைக் காத்து (ஸாது பரித்ராணம்) அல்லவரைத் தேய்க்கும்' (துஷ்க்ருத் விநாசம்) பொருட்டாகப் பூவுலகில் இராமன், கிருஷ்ணன் போன்ற அவதாரங்களை அந்த ஆழிநாயகன் மேற் கொள்வது விபவமாகும். மேன்மைக் குணங்களோடு கூடிய அவனது நீர்மைக் குணங்கள் (இருட்டறையில் விளக்குப் போல) நன்கு ஒளி விடுவது இந்த அவதார காலங்களில்தான். நினைத்தபோது, நினைத்த இடத்து, நினைத்த வண்ணம் அவதரிக்க வல்ல ஸர்வ சுதந்திரன் அவன் ஒருவனே. ஆதலால் 'எந் நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய், இமையோர் தலைவா!' என்று விவரித்தார் நம்மாழ்வார்.

*அந்தர்யாமி :* கறந்த பாலுள் நெய்யே போல், எள்ளுக்குள் எண்ணெயாக இவ்வையகம் எங்கும் நிறைந்து கருதற்கு அரிய உயிருக்கும் உயிராய், உயிர்களின் ஸத்தை (உளதாதல்) ஸ்திதி (நிலைத்தல்) பிரவ்ருத்தி (ஒரு செயலில் மூளுதல்) நிவ்ருத்தி (ஒன்றிலிருந்து விடுபடுதல்) அனைத்தும் தான் இட்ட வழக்காய் விளங்கும் பரமன், சிலரிடம் உவந்து கட்டைவிரல் அளவில் அவர்கள் இதயத்தில் தனிச்சிறப்போடு எழுந்தருளியிருக்கிறான். இவ்வகையில் அமைந்த இவ்விரு வகை இருப்பும் அந்தர் யாமித்துவமாகும்.

*அர்ச்சை :* எல்லாவற்றுக்கும் மேலாக நீர்மையின் எல்லை நிலத்தில் அடியவர்களின் கண்ணுக்கு இலக்காகி, அவர்கள் இட்ட வழக்காய், அடியார் விரும்பும் வகையில் பொன், வெள்ளி முதலிய

உலோகங்களிலும், மரம், மண், கல், வரைசித்திரம், அனைத்திலும் பிம்ப, ஓவிய வடிவில் "தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே" என்று எழுந்தருளி மண்ணவர்க்கு அருள்பாலிக்கும் ஸ்ரீமந் நாராயணனின் அழகிய வடிவமே அர்ச்சாவதாரமாகும். தன்னை அனாதரிக்குமவர்களையும் ஆதரிக்கும் நிலை இதுவான தால் இறைவனின் நீர்மைக்கு இதனின் மேம்பட்ட நிலை இல்லை.

## குணங்களின் ஒளி

நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தான் என நான்கு கோலங்களில் மண்ணுலகில் கோயில் கொண்டுள்ள திருமாலுக்கு ஜ்ஞானம் (அறிவு) சக்தி (ஆற்றல்) பலம் (வலிமை) ஐசுவரியம் (செல்வம்) வீரியம் (ஆண்மை) தேஜஸ் (ஒளி) இவை ஆறும் மேன்மைக் குணங்களாம்.



அறிவாற்றல்களோடு ஸ்வாமித்வம் (உடையவன் என்ற உறவு), வாத்ஸல்யம் (அன்பு), ஸௌசீல்யம் (தோழமை), ஸௌலப்யம் (எளிமை), மற்றும் கருணை (க்ருபை), க்ஷமை (பொறுமை), அழகு, இளமை, எளிமை போன்ற நீர்மைக் குணங்கள் நமக்காகவே ஏற்பட்டவை.

## அருளிச் செயல்



இத்தகையகுணக்கடலில் அர்ச்சாவதார அனுபவத்தில் ஆழ்ந்தவர்கள்தாம் ஆழ்வார்கள். இறைவனின் காரணமற்ற கருணைக்கு இலக்கான ஆழ்வார்கள், "மாலுகந்த ஆசிரியர்கள்" ஆவர்.

மண்ணில் அறம் குன்றி மறம் மிகுந்து நிற்கும் போது, அவதாரங்கள் செய்த இறைவன், சாதுக்களின் நீதி நெறிகள் நிலைகுலையாமல் அதனை வலியுறுத்த, தன் அவதாரங்களும் பயன்படாத நிலையில், மானிட இனத்தாரைக் கொண்டே, மக்களைத் திருத்தத் திருவுள்ளம் கொண்டான். ராஜஸம், தாமஸம் கலசிப் பொதுவாகிக் குழம்பி நிற்கும் வேதநெறிகள், வர்ண ஆசிரம தர்மங்கள் இவைகளையும் கடந்து, இவற்றிலிருந்து வடிகட்டியதான ஸாத்விக நெறிகளை ஸ்ரீவைஷ்ணவ மரபுகளை வளர்க்க ஆழ்வார்களுக்கு மயர்வற மதி நலம் அருளினன் இறைவன்.

"என் நெஞ்சத்துள் இருந்து, இங்கு இரும் தமிழ் நூல் இவை மொழிந்து" என்றும், "என் நெஞ்சும் உயிரும் உள்கலந்து தானே

யான் என்பானாகித் தன்னைத்தானே துதித்து" எனவும் நம்மாழ்வார் மூலம் வேதம் தமிழ் செய்தான் இறைவன். நம்மாழ்வாரைத் தலைமை கொண்ட மற்றைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் "பேசிற்றே பேசி" ஒத்த கருத்தை வெளியிட்டன. "வேதம் தமிழ்" செய்த மாறன் தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தார் திருமங்கை மன்னன்.

ஆழ்வார்கள் பாசுரங்களிலே ஆத்ம பரமாத்ம தத்துவங்களோடு உயிர்க்குலத்திற்குக் காட்ட வேண்டிய, பேரன்பின் பல்வேறு வடிவங்களைக் காணலாம். தாயின் இனிய பண்பு, தந்தை நமக்கு நாடும் நன்மை, அன்புக்கு அடிமையுற்றவர் தொண்டு, வணக்கம் மிக்க பக்தனின் வழிபாடு, தலைமகனிடம் தலைமகளின் உண்மையான உயிர்க்காதல், பொங்கும் பரிவினால் அனைவர்க்கும் வாழ்த்துரைகள் (மங்களா சாஸனம்) இவை அனைத்தும் அருளிச் செயலில் காணலாம்.

## ஆழ்வார்களின் அரங்கம்

வேதத்தின் ஆழ்பொருளை சாறு பிழிந்து அமுதத்தமிழிலே "மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி இறைவனைக் காணும் இதயத்து இருள் கெட, ஞானமென்னும் நிறை விளக்கேற்றி மாமலராள் தன்னொடு மாயனைக் கண்டமை கூறினர்; சீரிய நான்மறைச் செம்பொருளை அடிமுதல் முடியளவாக அரங்கத்தின் அனுபவத்தில் காட்டினர் ஆழ்வார்கள்.

பொய்கையார் பூதத்தார் புகழ்மழிசை
ஐயன் அருள்மாறன் சேரலர்கோன் - துய்யபட்ட
நாதன் அன்பர்தாள் தூளி நற்பாணன் நற்கலியன்
ஈதிவர் தோற்றத்து அடைவாம் இங்கு.

ஆழ்வார்கள் பதின்மருடன் மதுரகவி, ஆண்டாள் இருவரையும் சேர்த்து பன்னிருவர் என்பதும் உண்டு.

### முதலாழ்வார்கள்

பொய்கை, பூதம், பேய், மூவரும் ஐப்பசியில் ஓணம், அவிட்டம், சதயம் எனும் நாட்களில் காஞ்சி, மாமல்லை, மாமயிலையில் முறையே தோன்றினர். திருக்கோவலூர் இடைகழியில் ஓர் இரவில் நெருக்குண்டு புறவிருள், அகவிருள் நீங்க ஞானத்திருவிளக்கேற்றி "திருமாலைக் கண்டவர்கள்". இம்மூவரும். மூன்று திருவந்தாதிகள் பாடினர்; நற்றமிழால் நூல் செய்து நாட்டை உய்வித்த பெற்றிமையோர் முதலாழ்வார்கள் என்று பேர் பெற்றனர்.

## திருமழிசைப் பிரான்

தையில் மகத்தில் தரணி போற்றப் பிறந்த திருமழிசையார், பிரம்பறுக்கும் குலத்தில் வளர்ந்து யோகியாகி, சாக்கியம் கற்றோம். சமணம் கற்றோம், சங்கரனார் ஆகமநூல் ஆய்ந்தோம் என்று இறுமாந்து முடிவில் பேயாழ்வார் அருளினால் ஆழ்வாராகத் திருந்தியவர். திருச்சந்த விருத்தமும், நான்முகன் திருவந்தாதியும் இவரது நூல்கள். பகவத் பரத்வம் கூறுவதில் வாளை உறையிலிடாதவர்.

## நம்மாழ்வார்

"அருள் மாறன்" எனப்படும் சடகோபர், வைகாசி விசாகத்தில் காரிக்கு உடைய நங்கை வயிற்றில் வந்துதித்தார். குருகூர் நம்பி, 'நம் ஆழ்வார்' என்று தலைமை பெற்று ஸ்ரீவைஷ்ணவத்தில் பிரதம ஆசார்யராகத் திகழ்கிறார். 'வேதம் தமிழ் செய்த மாறன்' எய்தற்கு அரிய மறைகளை ஆயிரம் இன்தமிழால் பெய்தற்கு உலகில் வரும் சடகோபன், திரு விருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு திவ்விய பிரபந்தங்களை நான்கு வேத சாரமாக அருளியவர்.

## மதுரகவி

"தேவு மற்றறியேன்" என்று குருகூர் நம்பியைத்தவிர வேறு தெய்வமறியாத மதுரகவி, 'மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள் நிற்கப்பாடி என்நெஞ்சுள் நிறுத்தினான்' 'அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே' என்று நம்மாழ்வாரின் அருள் திறத்தைப் பறை சாற்றினார். தமது நூலான கண்ணி நுண் சிறுத்தாம்பினில். இவர் திருக்கோளூரில் சித்திரையில் சித்திரை நாள் உதித்த அந்தணர்.

## குலசேகரன்

மாசிப் புனர்பூசத்தில் சேரர் குலத்தோன்றலாக வஞ்சிக் களத்தில் வந்தவர், குடப்பாம்பில் கையிட்டு, திருமால் அடியார் பழி அகற்றி, குலசேகரப் பெருமாளாய்த் திகழ்ந்தவர்; பெருமாள் திருமொழியில் ஸ்ரீராமாயணச் சுருக்கம், கிருஷ்ண லீலைகளோடு, திருவரங்கம், திருமலை திவ்யதேசப் பெருமை, தசரதன், தேவகி புலம்பல்களையும் இவர் நூலில் அநுபவிக்கலாம். திருவித்துவக் கோடு இவர் தந்த செல்வம்.

## பெரியாழ்வார்

கோதை பிறந்த வூர், கோவிந்தன் வாழுமூர், வில்லிபுத்தூர் வேதக்கோனூர் என்றெல்லாம் கொண்டாடப் பெறும் ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆனி தன்னில் சோதி நாளில் வேயர் குலத்தில் தோன்றியவர், பட்டர்பிரான் எனும் விஷ்ணுசித்தர், பாண்டியன் பேரவையில் வேண்டிய வேதங்கள் ஓதி, விஷ்ணுவின் மேன்மையை நிலைநாட்டி, பொங்கும் பரிவால் இறைவனுக்குப் பல்லாண்டு பாடி பெரிய ஆழ்வாரானார். வில்லி புதுவைப் பட்டன், அசோதையாக மாறி, பிள்ளைத்தமிழ் பாடி, கிருஷ்ணானுபவத்தை முற்ற முடியப் பெற்றவர், பெரியாழ்வார் தம் திருமொழியில்.

> கோதிலவாம் ஆழ்வார்கள் கூறுகலைக் கெல்லாம்
> ஆதி திருப்பல்லாண்டு ஆனதுவும் - வேதத்துக்கு
> ஓம் என்னுமது போல் உள்ளதுக்கெல்லாம் சுருக்காய்
> தான் மங்கல மாதலால்.

என்று திருப்பல்லாண்டு, நாலாயிர திவ்வியப் பிரபந்த முகப்பாய் அமையும் தன்மை பெற்றுள்ளது.

## ஆண்டாள்

பூமிப்பிராட்டியே, நமக்காக வைகுந்த வான் போகம் தன்னை இகழ்ந்து, ஆடிப்பூரத்தில் ஆழ்வார் திருமகளாராய் அவதரித்தது பட்டர்பிரானின் சிறப்பை மேலும் உயர்த்துகிறது. திருப்பாவை, நாச்சியார் திருமொழிகளை நமக்கு அருளி, பகவானுக்கு சூடிக் கொடுத்தவள் நமக்கு அவனையே பாடிக் கொடுத்தவளும் ஆகிறாள். வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ், நாள் தவறாது ஓதி வரும் வைணவ நூல் திருப்பாவை.

## அன்பர்தாள் தூளி

அர்ச்சையில் அரங்கனைத் தவிர வேறு ஒருவரையும் பாடாத அன்பர்தாள் தூளி, மண்டங்குடியில், மார்கழிக் கேட்டையில் வந்துதித்தார். திருமாலுக்குத் திருப்பள்ளி எழுச்சியும் பாடினார். தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோளுடன் துலங்கினார் தொண்டரடிப் பொடி. 'அடியார்க்கு என்னை ஆட்படுத்தாய்' என்று வேண்டினார்.

## திருப்பாணாழ்வார்

'காட்டவே கண்ட கமல பாதம்' என்று அமலனாதி பிரானின் அங்கமனைத்தையும், அரங்கத்தில் கண்டு மகிழ்ந்து விண்டு ரைத்தவர் திருப்பாணன், உறையூரில் கார்த்திகை ரோகிணியில் தோன்றி பாணராய் வளர்ந்து, முனி வாகனராய் உயர்ந்து, 'என்

அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்று அரங்கன் திருமேனியில் மறைந்தவர்.

### திருமங்கை மன்னன்

வேதம் தமிழ் செய்த மாறன் தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்த மங்கையர்கோன், கார்த்திகையில் கார்த்திகை நாளில் காசினியில் திருக்குறையலூரில் கள்ளர் மரபில் தோன்றி, திருவாலி நாடனாகத் திகழ்ந்தார். வாள்வலியால் திருமணங் கொல்லையில் திருமாலிடமிருந்து திருமந்திரம் கொள்ளை கொண்டார்.

குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயர் ஆயின
வெல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும் பருளும் அருளொடு பெருநில
மளிக்கும்
வலம் தரும் மற்றும் தந்திடும் பெற்றதாயினும்
ஆயினசெய்யும்
நலம்தரும்சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணா
என்னும் நாமம்.

நற்பொருள் காண்மின் பாடிநீர் உய்ம்மின் என்றும் நம்மைப் பணித்தார். பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருஎழுகூற்றிருக்கை, சிறிய, பெரிய திருமடல்கள் ஆகிய ஆறு திவ்யப் பிரபந்தங்களை அருளினார். "நின் திருவெட்டெழுத்தும் கற்று - நான் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை" என்று முடிவு கட்டினார்.

பரமனின் அருளையே பற்றி நின்ற ஆழ்வார்கள் அவன் அன்றி மற்றொன்றும் வேண்டா மதத்தினர். தமிழகத்தில் ஊற்றெடுத்து, பாரதமெங்கும் பரவிய பக்திப் பெருவெள்ளம் ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகப் பரிணமித்தன. ஆழ்வார் பாடல் பெற்ற மண்ணெல்லாம் திவ்ய தேசமாயின. நீரெல்லாம் தீர்த்தங்களாயின.

### நூற்றெட்டுத் திருப்பதிகள்

ஆழ்வார் மங்களாஸாஸனம் (பாடல்) பெற்றவை நூற்றெட்டு திருப்பதிகள், நூற்றெட்டு என்ற எண்ணுக்கு உலக மக்கள் ஏற்றமளிப்பதும் இதனாலேயே.

ஈரிருபதாஞ் சோழம், ஈரொன்பதாம் பாண்டி
ஓர்பதின் மூன்றாம் மலைநாடு; ஓிரண்டாம் - சீர்நாடு
ஆறோடீரெட்டுத் தொண்டை; அவ்வடநாடாறிரண்டு
கூறு திருநாடொன்றாகக் கொள்.

*சோழ நாட்டில் 40, பாண்டிய நாட்டில் 18, மலைநாடு 13, நடுநாட்டில் 2, தொண்டை மண்டலத்தில் 22, வடநாடு 12, திருநாடு 1 ஆக நூற்றெட்டு திருப்பதிகள்.*

ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர் தாம் வாழி - ஏழ்பாரும்
உய்ய அவர் களுரைத்த அவைகள் தாம்வாழி
செய்ய மறை தன்னுடனே சேர்ந்து.

*என்று ஆழ்வார்களின் சீர்மை அறிந்து நமக்கு அவர்களை உரியமுறையில் காட்டிக் கொடுத்த ஆசார்யர்களின் தனிச் சிறப்பை மணவாள மாமுனிவன் கொண்டாடுகிறார்.*

வைணவப் பணி

அன்பு செய்து உயிர்க்குலத்தை அணைத்துக் காத்து
ஆசானின் அறிவுரை கேட்டு, அறநெறியில் நின்று
இறை உணர்வில் இன்பம் கண்டு என்றும் துய்த்து
ஈவதில் தன்னடக்கம் போற்றிப் பேணி,
உலகளந்தான் உணர்வினிலே ஊறித்திளைத்து
ஊர்நலனில் தன்னலனும் அடக்கம் என அறிந்து
எட்டெழுத்து மந்திரத்தை என்றும் மறவாமல்
ஏழை எளியவர்க்கு இரக்கம் காட்டி இயன்றதுஉதவி
ஐயமின்றி கீதைவழி என்றும் நடந்து
ஒன்றே குலம் ஒருவனே தேவன் என உறுதிபூண்டு
ஓர்வதும் ஓதுவதும் திருமாலே என உணர்ந்து
ஔஷதம் போல அவன் திருநாமம் நாவில் திகழ
அஃகாமல் 'இறைபணியே' எப்போதும்செய்து வாழ்வோம்.

*- சே. ரா.*

*சங்ககாலத் தமிழர் சமயம் திருமாலையே முழுமுதற் கடவுளாகப் போற்றுகிறது.*

*இது திராவிட நெறி. இதில் வைணவம் ஒன்றே குலம்; திருமால் ஒருவனே தேவன்!*

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்!*

|| ஸ்ரீ: ||





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ எம்பார் ஜீயர் ஸ்வாமி

ஸ்ரீ வைணவ உலகம் மிக்க உகப்போடு கொண்டாடும் நாள் ஸ்ரீஜயந்தி. 'கண்ணன் அல்லால் தெய்வமில்லை' என்றார் நம்மாழ்வார். மாயன் பிறந்த ஆவணி ரோகிணியில் பிற்காலத்தில் அவதரித்து அந்த நாளுக்கு மேலும் சிறப்புச் சேர்த்தார், வியாக்யானச் சக்கரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை.

அண்மைக்காலத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் 1834-ல் ஜய வருஷம் அதே நாளில் அரியதொரு மஹான் தோன்றி அந்நாளை மிகவும் புனிதமாக்கினார்.

எம்பெருமானார் பகவத் ராமாநுஜர் "தென்னரங்கன் செல்வம் முற்றும் திருத்தி வைத்து", புகழ் பெற்றது போல், அவர் அவதரித்த ஸ்ரீபெரும்பூதூரின் பெருமைக்குரிய ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் ஸ்ரீ பாஷ்யகாரர் ஸந்நிதியில் பல நல்ல சீர்திருத்தங்களைச் செய்து உடையவரின் செல்வம் மிகவும் பொலிவுறச் செய்தவர் அப்பன் திருவேங்கட ராமாநுஜ எம்பார் ஜீயர் ஸ்வாமி எனும் மஹான் ஆவர்.

ஆதியில் முதலாழ்வார்கள் மூவரும் கூடிய திருக்கோவலூர் அருகேயுள்ள கப்பியாமூர் எனும் கிராமத்தில், "ஸ்ரீவத்ஸகுல" அந்தணர் ராகவாசாரியர் - ஸ்ரீமதி ஜானகியார், ஸ்ரீஜயந்தி நாளில் இவரை பெற்றெடுத்து 'கிருஷ்ணன்' என்றே பெயரிட்டனர்.

கருவிலே திருவுடையரான இவர் தெய்வ உருவங்களை வைத்தே விளையாடும் இளம்பிராயத்தில் திருவேங்கடவனின் தரிசனம் பெற்றார்.

இளமையிலேயே வேத, இதிகாஸ, புராணங்களோடு, தர்க்க, மீமாம்சா வியாகரண சாஸ்திரங்களையும் கற்று, கல்யாண வயதிலேயே, திருமலைக்குச் சென்று துறவு பூண்டார். நாடெங்கும் நடந்து நல்லோர் பலர் அருள்பெற்ற, திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமியிடமிருந்து துறவு நெறியை மேற்கொண்டு, மதுரமங்கலம் அடைந்து, எம்பார் அருள் பெற்று நற்குண சீலராய் ஸ்ரீபெரும்பூதூர் உடையவரிடம் வந்து சேர்ந்தார்.

எம்பார் மடம் நிறுவி பல அரிய பெரிய சாதனைகள் புரிந்தார். ஸ்ரீபெரும்பூதூர் வஸந்த மண்டபம், கோதா விலாசம் எனும் நந்தவனம், வனபோஜன உத்ஸவம், திருமஞ்சன கட்டியம், சென்னையில் சத்ய சமாஜம் மற்றும் நூல்கள் பல எழுதி, நூல் வழி நடந்து பிறருக்கும் வழிகாட்டியவர்.

இவரையடுத்து பத்தாவது பட்டம், பதினோராவது ஜீயராக, "திருமால்" ஆசிரியர் குமாரவாடி சே. இராமாநுஜாசார்யர் பதவி ஏற்று தற்போது "அப்பன் பரகால ராமாநுஜ எம்பார் ஜீயராக" விளங்குகிறார்.


அப்பன் பரகால ராமாநுஜ எம்பார் ஜீயர்

30, M.M. கோயில் தெரு,

ஸ்ரீபெரும்பூதூர் - 602 105

போன்: 27162073 செல்: 99943 23397



|| ஸ்ரீ: ||



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருமால்

(ஆன்மிகத் திங்கள் இதழ்)

ஆசிரியர்: **ஸ்ரீ உ.வே. குமாரவாடி சே. இராமாநுஜாசாரியர்**
(தற்போது ஸ்ரீபெரும்பூதூர் அப்பன் பரகால ராமாநுஜ எம்பார் ஜீயர்)

"தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுக பண்டே பரமன் பணித்த பணிவகையே" என்ற நம்மாழ்வார் கட்டளைப்படி திருமாலே கைம்முதலாய் பகவத், பாகவத, ஆசார்ய கைங்கர்யமாக மாதம் தவறாமல் கால் நூற்றாண்டாக வெளிவரும் ஸ்ரீவைஷ்ணவ இதழ் 'திருமால்'.

தமிழகமெங்கும் மூவாயிரம் கி.மீ. நடந்து, பாகவத, பாத யாத்திரை செய்து, 'நாடும் நகரும், நன்கறிய திருமால் அடியார்' பணி புரிந்தவர் இதன் ஆசிரியர்.

ஆன்மிகச் செய்திகளோடு, வேதாந்த விழுப்பொருளை இன்றைய அறிவியல் சமுதாயமும் ஏற்கும் வகையில் ஆழ்வார்கள், ஆசாரியர்களின் அடியொற்றி, தீந் தமிழில் இனிய எளிய நடையில், புதுபுதுக் கருத்துக்களை "திருமால்" தருகிறது.

வைஷ்ணவ வளர்ச்சிக்கான அரிய கருத்துப் பெட்டகமாய் விளங்கும் 'திருமால்" இதழுக்கு நீங்களும் சந்தா செலுத்தி வாசகராகுங்கள்.

ஸ்ரீவைஷ்ணவ வளர்ச்சிக்கான உங்கள் சபையின் செய்திகளை எழுதியனுப்புங்கள். "திருமால்" இதழ் அஞ்சல் மூலம் பெறலாம்.

இவண்
வாசகர் வட்டம், சென்னை

**ஆண்டு சந்தா ரூ. 100. பத்து ஆண்டுக்கு ரூ. 1000.**

அணுகுக:

ஆசிரியர்
**திருமால்**
20/53, ஆபிரகாம் தெரு, மயிலை,
சென்னை - 600 004
தொலைபேசி: 2495 4247